










# இயேசு ஒரு ஸென் குரு









pax.ravichandra@gmail.com

Pax Ravichandra

5-2-2024

# ஆன்மீகவாதி இயேசு

---

***உண்மைக்கான ஒரு தனி மனித இருப்பின்***
***அகக்கிளர்ச்சியே ஆன்மீகம்***
***தன்னுள் நுழைந்து- தன்னை அறிந்து***
***கட உள் ஆகிடும் சத்திய யாத்திரை தெய்வீகம்***





பண்பாடு, திருச்சட்ட பாரம்பரியங்களை-அன்பால் புடமிட்டு
மானுட சொல், செயல், சிந்தையை -உண்மை
எனும் நெம்புகோலால் புரட்டிப்போட்ட
தனி மனித ஆன்மீகக் கிளர்ச்சி-இயேசுவின் அன்பின் புதுப்புரட்சி

சட்டம், சடங்கு, மிருக பலியால் நாறிடும் மதம்
தேர்ந்து கொள்ளப் பட்ட இறையினம் நாமே
இஸ்ராயேலரின் தனித்த அடையாளம்
மாறாத ஆணவ குணம்

இலை கிளை நிறைந்த காய்க்காத அத்திமரத்தை
பட்டுப்போக சபித்து, எளிய மனங்களில்
புரட்சி விதைகளைத் தூவிய
ஆன்மீக கிளர்ச்சியாளனோ ஞான உழவன்

***கள்வர் குகையான ஆலயம்***
***கல்லின் மேல் கல் இராதபடி இடிக்கப்படும்***
***சாபமிட்ட மாமுனிவன்***

கும்பலோடு கும்பலாய் வாழாது, கோஷங்களுக்கும்,
கைதட்டல்களுக்கும்,மாலைகளுக்கும், மணி முடிக்கும்
மண்டியிடாத ஆன்மீகக் கிளர்ச்சியாளன்
ஒடுங்கிய வாசல் வழியே-தனி மனித சத்தியகிரகியாய்
தன் சிலுவையைச் சுமந்த சத்திய யாத்ரிகன்

பரிபூரண சரணாகதியில்-இயேசு
கிறிஸ்துவாய், தம்மை தாமே பிறப்பித்த திருநிலை
***ஊனுடலில் சிறைப்பட்ட ஆன்மாவின் விடுதலை***

நம்மை அறிந்து விழிப்புணர்வில் நிலைக்க
கிறிஸ்து உணர்வு நம்முள்ளே என்பதே
மனுமகனின் மாறாத அறை கூவல்

ஒளி உண்டாகுக- ஆதியின் முதல் வார்த்தை
ஆணவ இருள் மறைந்திட, இறை பிரசன்னம் தரிசனமானது
இருளும், ஒளியும் , அலகையும், ஆண்டவனும்
நம்முள்ளே காட்சியானது

வாழ்ந்தறியும் உண்மையை வாழ்வாக்கிட
இயேசுவாகப் பிறப்பதே நத்தார்
ஆன்மீக கிளர்ச்சியும், சிலுவையுமான
வாழ்வோ நாளும் திருநாள்




ஆணவத்தின் இறப்பும், தூய மனதின் பிறப்புமாக
நாம், இயேசுவாக மாறும் அகமாற்றமே
நம் இரண்டாம் பிறப்பு

நாம் இயேசுவாக பிறக்காவிடில்
இறைவனை அறியவும் முடியாது
அன்பு செய்யவும் முடியாது

இயேசு, கிறிஸ்துவாக மலர்வதே உயிர்ப்பு
நமக்கு நாமே மீட்பராகும் அற்புத நிகழ்வு
நம்மில் அவரின் இரண்டாம் வருகை
நம்பிக்கை கடந்த தவமே உண்மை

வருடந்தோறும் கும்பல்கள் கொண்டாடும் நத்தார்,
உயிர்த்த ஞாயிறு, அர்த்தமற்ற கொண்டாட்டங்களே
பொத்தல் வலைகளோடு ஆழமற்ற கடலில்
மீன் பிடிக்கும் ஆரவாரங்களே

ஆன்மீகம் -ஆழ்கடலில் வலை வீசும்
துணிச்சலான தனி மனிதப் பயணம்
ஆணவம் கழித்து-சரணாகதியில் தன்னைத்
தான் கண்டு கொள்ளும் சத்திய தரிசனம்

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-11-10-2023*

# அபினியும் போதையுமாய் நாறிடும் மதம்

---

இறைமகனானால், இந்தக் கல்லையும் அப்பமாக்கும்
ஆணவத்தை தூண்டும் அலகையின் ஆசை வார்த்தைகள்
பாலையில் எதிரொலிக்க, இறைவார்த்தையோ அதை நிராகரிக்க,
கல்லையும், அப்பத்தையும் கடவுளாக்கி, எள்ளி நகையாடும்
கத்தோலிக்க திருச்சபையின் வல்லமைதான் என்னே?



மண்டியிட்டு என்னை வணங்கினால்
மண், பொன், மாட்சி எல்லாம் உமதாகும் -அலகையின்
ஆசை வார்த்தைக்கு அடிபணியாத இறை வார்த்தை
தந்தை சித்தமே தன் சித்தம் என்ற அன்பின் கீதை

புகழும், வல்லமையும், மாட்சியும், செல்வமும்
திருச்சபைக்கோ உரித்தாக-தொழுவத்தில் பிறந்து
கழுமரத்தில் தொங்கியவரின் வாரிசுகள்
கோடி-ஈஸ்வரர்கள்-கற்பு. பணிவு,
ஏழ்மை எல்லாம் மாயக் கற்பனைகள்.




பக்தர்கள் காணப் பாதணியின்றி நடமாடும் தவசிகள்
சொகுசு வாகனத்தில் பயணிக்கும் உல்லாசிகள்
குணமளிக்கும் கூட்டம் நடத்திடும் அருட்பணிகள்
கொரோனா தடுப்பூசி ஏற்றிய பச்சோந்திகள்

மேலிருந்து கீழே குதியும்-மாயம் செய்யும்
புதுமை விரும்பும் மக்கள்
புகழ்ந்தேற்றி உம்மை இறைமகன் என ஏற்பார்

உன் ஆண்டவனை சோதியாதே பசப்பிய அலகையை
கடிந்தவர் சீடர்களோ-குணமளிக்கும் கூட்டங்களால்
புதுமைகள் புரிந்து புகழ் சேர்க்கின்றார், இறைவாக்குரைத்தே
இறைவனை எள்ளி நகையாடுகின்றார்

வழிபாடு, பலி வெற்றுச் சடங்காக
வழிபடுவதும் கல்லும், அப்பமுமமாக
முகவரி தேடும் முகநூல் விளம்பரதாரிகளாய்
அருட்பணிகள், சாரமற்ற உப்பாய் மதம்

சாரமற்ற உப்பு-சாலையில் மிதிபட
எண்ணெய்யில்லாத விளக்கு இருளில் மூழ்கிட
சஹ்ரானின் குண்டு:வெடிப்பை முன்னறிவித்த
இறைவாக்கினராய் யாருமிலர்?




கங்கையும் போக்குமோ- பாவத்தை
கடாவின் குருதியும் போக்குமோ? திருமுழுக்கும்,
ஒப்புரவாக்கல் அருட்சாதனமும் போக்குமோ பாவத்தை?
அண்ணகரை அருட் பொழிவும் குரு ஆக்குமோ?

அப்பமும் இறைமகனாகுமோ? உறுதிப்பூசுதலும்
இறையாவியைத் தருமோ? பகுத்தறிவை மழுங்கடிக்க
ஞானம் கடந்த போதை வஸ்தாய் மதப்போதனைகள்
குணமளிக்கும் கூட்டங்கள்

குருடருக்கு குருடர் வழிகாட்ட
குழியில் விழும் விசுவாசிகளோ மந்தையினம்.
அன்னாஸ்-கைபாஸாய் ஆளும் பூசாரி வர்கமோ
ஆட்டுத்தோல் போர்த்திய ஓநாயினம்.

சிறுவர் துஷ்பிரயோகங்களும், அருட் சகோதரிகளை
பாலியல் வல்லுறவு செய்த அவலங்களும்
திருச்சபையை நாறடிக்க-கள்வர் குகையான ஆலயம்
சத்திய தரிசனத்திற்கு இரும்புத் திரையாக,
கல்லின் மேல் கல் இராதபடி-**கல்லின் மேல்**
**கட்டிய திருச்சபை இடிக்கப்படும்**
**இன்றும் இடியாய் முழங்கும் இயேசுவின் சாபம்**




இன்றும் இயேசுவை காட்டிக் கொடுக்கும் யூதாஸ்
அறியேன் என மறுதலிக்கும் சீமோன்
இறையரசில் அரியணை தேடும் செபதேயுவின் மக்கள்
நம்மில் யார் பெரியவன் விவாதிக்கும் சீடர்கள்

இயேசுவோ இன்றும் சிலுவையில்-நல்ல கள்வனோ
மோட்சத்தில், அன்னையோ மகன் காலடியில்
அன்னாஸ், கைபாஸோ மத அரியணையில்

*Amicus Ecclesia, sed magis amica veritas*
*The Church is my friend, but truth is a better friend-*

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-10-2023

# அப்பா! தந்தாய்!

---

எல்லாம் வல்லவராய்-Omnipotent
எங்கும் நிறைந்தவராய்-Omnipresent
எல்லாம் அறிந்தவராய்- Omniscient
எட்டாத வானகத்தே வாழும்
அந்நியனாய்-impersonal
அறிவுக்கெட்டாதவராய்-Transcendental
அஞ்சத் தக்கவராய்- அனுகமுடியாதவரை
வாழும் இறைவனை
அப்பா, தந்தாய் என்றழையுங்கள்
இறைவன் நம் தந்தை -இறை குடும்பம் நாம்
நீங்கள் என் சகோதரர்-நாம் தெய்வங்களே
உறவாட கற்றுத்தந்த உன்னத குரு இயேசு






பரிபூரணமோ சூனியம்
பரம்பொருளின் நாமம் பரிசுத்தம்
பரிசுத்தமே பரிபூரணம்.(God is whole & holy)
தூய உள்ளமே பரலோகம்

தந்தையாய், குடும்பத் தலைவராய், போஷித்து,
கற்பித்து, வழிநடத்தி, பாதுகாத்து,
பாராமரிக்கும் பாலினம் கடந்த மெய்பொருள்
ஆளுமை நிறைந்த இறைவன்

ஆணவம் கழிந்த மனமே ஆண்டவன் இருப்பிடம்.
அமைதியின் இருப்பிடமே இறையரசு

என் சித்தமன்று, உம் சித்தம் என்பதே
ஆணவமழிந்த மனதின் வேண்டுதல்
உண்மையை அன்பால் ஓதுதலே வாழ்வு

அமைதியில்லாத, ஆனந்தமில்லாத அரசோ
நம் ஆணவ மனத்தின் சிருஷ்டி, அதுவே ஆதாம் மனம்
பரிபூரண சரணாகதியே தூய கிறிஸ்து மனம்

அப்பத்தினால் அல்ல-***இறை வார்த்தையே***
***வாழ்வுதரும் நம் அன்றாட உணவும் பானமும்***
இறைவார்த்தை நம்முள் வாசம் செய்ய-***இம்மானுவேலாய்***
இறைமக்களாய் எம் உருமாற்றம், ஏதேன் நம் சொந்தம்.

ஆணவமழிந்த மனமே இருமை கடந்து, நான் நீ துறந்து,
எதிரி நண்பன் கழித்து குற்றங்களை மன்னிக்கும்
மன்னிக்கும் மனமே தெய்வீகம்
மன்னிக்கும் மனமே இறை மன்னிப்பை பெறும்

ஆணவமே சோதனை, விழிப்புணர்வே இறை நிலை
மனமழிய- சும்மா இருத்தலே பேரின்பம்.

மனமே இருமையின் இருப்பிடம், இருமை கழிய
சாட்சி பாவம் பிறக்க, ஆணவ "நான்" அழியத்-தோன்றும்
தூய மனமே இறைவனைக் காணும்




நான் நீ என்ற பேதங்களில்லை, இருப்பது ஒன்றே
அதுவே தெய்வீகம்.அஹம் பிரம்மஸ்மி-தத்துவமஸி
நானும் தந்தையும் ஒன்றே-அனல் ஹக் எல்லாம் நாமே
***வாழ்வே தவமாக இயேசுவின் ஜெபம்.***

***நம்மை வெறுமையாக்கி இறைவார்த்தைக்கு***
***செவிமடுத்தலே ஜெபம்.***
எண்ணம் கழித்து மொழி கடந்த
வார்த்தைகள் கடந்த வார்த்தை -ஜெபம்.
நன்றியுணர்வால் பூரிக்கும் உள்ளத்தின்
இறை போற்றுதல் ஜெபம்

இறைவன் கற்றறிய அறிவல்ல-விவாதிக்கத் தத்துவமல்ல
இறைவன் வாழ்ந்தறியும் அனுபவம், அறிவு கடந்த அனுபூதி
தூய உணர்வு நிலையே இறைவன்

கேளாதீர்கள் எல்லாம் இங்கே
தட்டாதீர்கள் எதுவும் பூட்டப்படவில்லை
தேடாதீர்கள் எல்லாம் உங்களுக்குள்ளே
கண்டு கொள்ள-கட உள்ளே
கடவுள் நீங்களே

விழிப்புணர்வே இறை நிலை
கேட்கச் செவியுள்ளவர் கேட்கின்றார்
பார்க்க விழியுள்ளவர் காண்கிறார்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-11-10-2023*

# அறிவுப் புரட்சி

---

ஆண்டவன் கட்டளையை மீறி
அறிவுக்கனியை உண்ட ஆதிப்பெற்றோரால்
ஆரம்பமானது உலகின் முதற் புரட்சி



ஆடையின்றி நிர்வாணிகளாய்,
வீடின்றி-நல்லுணவின்றி வாழ்ந்த வனவாசிகள்
பகுத்தறிவுள்ள மானுடமாய் மாறி
மனித உரிமையை நிலை நாட்டிட
தொடுத்த முதல் புரட்சி ?




அறிவுக்கனியும், வாழ்வுக்கனியும் இருந்தும்,
அமரத்துவத்தை புறந்தள்ளி-அறிவுத் தேடலை
முன்னுரிமையாக்கி-அலகை தூண்டிய போராட்டம்
ஆணவத்தின் புரட்சி -அக வளர்ச்சியின் எழுச்சி

அலகையும் இறைவனும் உள்ளுணர்வின்
அடியும் நுனியுமான இரு நிலைகள்
ஆணவ மனிதனோ இடை நிலை
அறிவு நுழைந்திட, ஆணவம் பிறந்திட
தன்னுர்வு பெற்றவர் தம் இருப்பை உணர்ந்தார்
***ஏதேன் தோட்டத்தை இழந்தார்***

ஆணவம் கழித்து-என் சித்மன்று, தந்தையே
உம் சித்தம் என்ற இயேசு, பூரண சரணாகதியில்
***கிறிஸ்துவாய் மலர்ந்திட***
***ஏதேன் இயேசுவின் சொந்தமானது***
வாழ்க்கை வட்டம் பூர்த்தியானது-ஆதாம்
இயேசு கிறிஸ்துவாக மலர்தலே நிலை வாழ்வானது

ஆதாமும், இயேசுவும்-உள்ளுணர்வின்
ஆணவமும், தூயமனமுமான நிலைகள்
தன்னுள் வீட்டைக் காணுதலே நிலை வாழ்வு
சொர்க்கம், நரகம் மனதின் நிலைகள்
மனமழிந்த நிலையே மோட்சம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-11-10-2023

# அருட்பா

---



ஆழ்வார்களும், நாயன்மார்களும், ஆண்டாளும்.
இறைபுகழ் பாடிய இன்ப உலகில் சிறுதொண்டன் என்னையும்
தாலாட்டிச் சீராட்டி, தமிழால் உயிரூட்டி- இன்புற்றே
தன்னைப் பாட வரம் தந்த எம்பெருமான்

வெண்மேகமாய் அலைந்து களித்து, கார்மேகமாய் கரையும்
வாழ்வு, புது நதியாய் பெருக்கெடுத்து கடலைச் சேரும் பெரும் பேறு,
கம்பனும், வள்ளுவனும், இளங்கோவும் பாடாத காதல் இல்லை
கண்ணதாஸன்போல் கவிஞனுமில்லை

காட்டுக்குயிலின் கச்சேரி- காசுக்கல்ல, கலாபமயிலின் நடனம்
கைதட்டலுக்குமல்ல, கானகத்தே காயும் நிலவும்
இரசிகனுக்கே, புள்ளினத்தின் இசைக்கோலமும்,
பூக்களின் மலர்க்கோலமும் இறைவனுக்கே-

தில்லையில் ஆடும் கூத்தனோ பெரும் கலைஞன்-
முத்தமிழை கற்றுத் தந்த முதல்வனும் அவனே
முக்காலம் கடந்த மெய்பொருளும் அவனே
அவனையன்றி எவரைப் பாடுவேன் என் நண்பா?

கல்தோன்றி, மண் தோன்றாக் காலத்தே
முன்தோன்றிய மூத்தகுடிக்கு, முத்தமிழை மொழியாக்கி
முத்தமிழ் புலமை சுவைக்க-புலவன் நக்கீரன்
தமிழோடு விளையாடிய இறையனார் எம் பெருமானே

இனியது இனியது கன்னியர் இதழ்சுவை இனிதே-ஆயினும்
உயிர் மெய் சிலிர்க்க உள்ளமும் நாவும் சுவைக்க
அமுதினும் இனிதாய் இனிப்பது கன்னித்தமிழே
என் தமிழ் நூற்காத தவத்திற்கு இறை ஈந்த வரமே

***தென் நாடுடையே சிவனே போற்றி-எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-11-10-2023

# அவதார புருஷர்கள்

---

அவதார புருஷரில் வேணுகான சக்கரவர்த்தியாய்
கோபியரோடு ஆடிப்பாடிய கோகுல கிருஷ்ணனாய்
பல்லாயிரம் மனைவிகள் கொண்ட காதல் புருஷனாய்
அரக்ககரை வதைத்து-சிசுபாலன் சிரமரித்த சக்கரனாய்
பாஞ்சாலி மானம் காத்த தோழனாய்-பார்தசாரதியாய்
பகவத் கீதை சொன்ன யோகியாய்
கண்ணனின் அதிசயக் கோலங்கள் பலப்பல.

சித்தார்த்தனாய் பிறந்து-யசோதரையை மணந்து
ராகுலனுக்குத் தந்தையாய் முடி துறந்து , பரிவிராஜராய்
அலைந்து ஞானம் பெற்றவரோ பெருமான் புத்தர்
நோயுற்றபோது மெய் வருந்தி மரித்து,
மரணத்தை கடந்த பரிநிர்வாணி

அன்னையாய்க் கன்னி மரியைத் தெரிந்து
ஆடிடத் தொட்டிலின்றி தொழுவத்தில் பிறந்து-
அம்மையப்பனோடு எகிப்திற்கு ஓடிய அகதிக் குழந்தை.

ஞானம் தேடி எகிப்து, காஷமீர், நாளாந்தா
திபேத் என அலைந்து. அன்பும்-தியானமுமான
இருவழிகளில், உயர்ந்த உன்னத ஞானி
விழிப்புணர்வுள்ள யோகி-இயேசு

மூன்று ஞானிகளும்-சிமியோனும்-அன்னாளும்
அடையாளம் கண்ட இறை அவதாரம்
குழந்தைகளை அள்ளியணைத்து முத்தமிட்டு
ஆசிர் வழங்கிய அன்பின் மூலாதாரம்

விருந்தாடி, விபச்சாரி-மீனவர்-தொழுநோயாளி எனத் தாழ்த்தப்பட்ட
ஏழைகளுக்கு உறவாகி. சுரண்டும் யூத மதவாதிகளைச் சாடி
அன்பினால் திருச்சட்டத்திற்கு புத்துயிர் ஊட்டிய-புரட்சியாளன்

காற்றும், கடலும் பொங்கியெழப்-படகில்
அசதியால் அமைதியாய் தூங்கிய மனிதன்
அச்சமுற்றுச் சீடர் புலம்பி எழுப்பிட
இயற்கையின் சீற்றம் தணித்தே
நானும், தந்தையும் ஒன்றென்ற அத்வைதன்

கள்வர் குகையான ஆலயத்தை கசையால்
குடமுழுக்குச் செய்த வேதியன்
மனம் திரும்பாத ஜெருசலேமுக்காய்
கண்ணீர் விட்ட மனிதன்

இலாசரின் மரணத்திற்காய்-சகோதரிகளோடு
நொந்தழுத சொந்தக்காரன், விலைமகளை காப்பாற்றிய விவேகி
ஒதுக்கப்பட்ட பாவிகளைத் தேடிய ஆயன்
கூழாங்கற்களை வைரங்களாய் மாற்றிய இரஸவாதி

மீனவர்களையும், லேவியனையும் சீடராக்கி
ஒதுக்கப்பட்ட தொழுநோயாளிகளையும்
வரிதண்டுவோர் தலைவன் சக்கேயுவையும்
நண்பனாக்கிய ஞான குரு

அன்பையும், விழிப்புணர்வையும் அள்ளித் தந்த
ஞானச்சித்தன், தனக்கென தாரம் கொள்ளாது தந்தை
சித்தமே தன் சித்தம் என சிலுவை மரணம் வரை பணிந்து
ஆணவம் கழித்த அதிசய புருஷன்

அச்சத்தால் இரத்த வியர்வை சிந்திய மனிதன்
கசையடிபட்டு, வசைமொழி கேட்டு-முள்முடி சூடி,
மூன்று ஆணிகளில் சிலுவையில் அறையுண்டு
அவமானச் சிலுவை மரணமேற்ற மனுமகன்

ஆறு காயங்களோடு-ஆறறிவைத் தாண்டிய
மாகருணையால்-தம்மை வதைப்போரையும் மன்னிக்க
தந்தையாம் இறைவனை வேண்டிய கருணாகரன்

எந்தையே எந்தையே ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்
என்று மன்றாடிய ஜீவன், தம்முயிரை தந்தையிடம்
கையளித்து, சாவை வென்று உயிர்த்த இறைமகன்

மனித உணர்வுகளோடு மனிதனாய், பசி, தூக்கம்,
துக்கம், கோபம், சந்தோஷம், பகிர்ந்து வாழ்ந்த
மாபுருஷர் இயேசுவைப்போல் யாருமில்லை

கிறிஸ்துவின் மலைப் பொழிவு, மனதை வசீகரிக்கும்
கவிதையாய் ஒலிக்க, அவர் வாழ்வெங்கும்-கருணையின்
அற்புதக் கோலங்கள் ஜொலிக்க-உண்மையின்
ஏழு சுரம் தாண்டிய தேவகானங்கள்

எதிரிக்கும் அன்பு என்றே மொழிந்து வாழ்ந்த ஈசனின் பந்தம்
“தியானம்-பிராத்தனை”எனும் “இருவழிகளிலும்
தலைசிறந்த இறை சொந்தம்

அறிந்தவருக்கு-இறைமகன்
அறியாதோருக்கு தச்சன் மகன்
அல்குரான் போற்றும் அதிசய ஈஸா நபி
பெருமான் புத்தர் மொழிந்த மைத்திரேய புத்தர்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-11-10-2023*

# தெய்வ மகன்



வான் பூத்த செந்தாமரை-வார்த்தையாகி
மண் வந்து மானுடர் நம்மிடையே குடியிருந்தது
மானுடர் நலமும், நல்வாழ்வும் பெற
தேன் ஈந்து தேசமெங்கும் சத்திய யாத்திரை செய்து
நற்செய்தி சொல்லி மகிழ்ந்தது

கோல ஒளி சிந்தி, தேன் மணம் கமழ்ந்த
வண்ண மலரைச் சூழ்ந்து -மதுகாரிகளாய்
மக்கள் கூட்டம்-



நல்நாதமாய் ஒலித்த இறை வார்த்தை-
நலிந்த உள்ளங்களுக்கு-நம்பிக்கையும்,
நலமும், நற்செய்தியும் ஈந்த தேன் மழை

மலைச்சிகரங்களில், மழையும், புயலும் வீசிய கடலில்,
பசும் புல்வெளிகளில், கடற்கரையில், ஆலயத்தில்,
தெருவில், சேரிகளில், மணவீட்டில், பிண வீட்டில்
மங்கலமாய் ஒலித்த வார்த்தை
வழியும், உண்மையும் வாழ்வும் நான் என்ற புதுமை
புது மதுவோ அமைதி தரும் போதை

பழம் மதுவைச் சுவைத்த வேதியருக்கு, புது மதுவின் சுவை
பிடிக்கவில்லை, சுவைத்த எளிய மனங்களுக்கோ
வார்த்தையோ தேன் கவிதை, இறைவாக்கும், ஆகமங்களும்
கடந்த இன்பப்போதை-அன்பே தெய்வம் என்ற தேவ கீதை

மதுகாரிகளாய் எளிய மனங்கள் சுவைத்து கொண்டாடிய தேன் மலரை-
சூதும் வாதுமான வேதிய நரிகள் சூழ்சியால் கொன்ற அவல நிலை
மாலை வருமுன் வாடிச் சருகான வண்ணமலர்-
பூவிழிகளிலோ கண்ணீர் மழை

மூன்றாண்டுகள் ஈந்த தேன் இதயத்தில் இனித்தது
மணம் சுவாசத்தில் கலந்தது, வண்ணம் கண்களில் நிலைத்தது-
கண்மறைந்த சத்சங்கமான இருப்பு- சமாதானத்தின் களிப்பு
எளிய மனங்களோ துன்பத்தில் நிலைப்பு

தேன்மலர் உதிர்ந்திட வானும், மண்ணும் அழுதிட
நாயனமாய் ஒலித்த இசை ஊமையானது



இளங்காலையில், அந்திவேளையில் ஒலித்த
புள்ளினத்தின் பூபாளம்- ஓய்ந்தது
பூமலரின் வாசம் மறைந்தது
பூந்தேனின்றி நல்மனங்கள் நலிந்தன

எங்கும் கேட்ட இறை வார்த்தை
இசையாய் ஒலித்த தேவ சங்கீதம்
சத்சங்கமான இருப்பு-கண்மறைந்தது

உண்ண வண்ணமலர்த் தேனாய் இனித்து
சுவாசத்தை பூவாசமாய் நிறைத்து
கண்களுக்குத் தேவதரிசனமான உண்மை
கண் மறைந்து போனது-
நல் மனங்களுக்கு உலகம் சூனியமானது
அமைதி எட்டாக்கனியானது

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-10-2023

# இதயகீதம்

---



எண்ணில்லா ஆனந்தம் இளநெஞ்சில் கூத்தாட
வண்ண மலர்கள் கோடி இதயத்தில் பூத்தாட
இதயத் துடிப்பும் இன்னிசையாய் மாறிட
பிரபஞ்சத்தில் இணைந்தாடும் சுவாசம்

புலன் ஒடுங்கி, மனம் அழிந்து, ஆனந்தம் பொங்கிட
மௌனம் மொழியாக, ஓசையற்ற இசையாக
அப்பா! தந்தாய்! என்று இதயம் அழைத்து களிகூர
தந்தை மகனின் ஆனந்த உரையாடல்

அன்பின் நறுமணம் மலரிலும் இனிதானது
ஆன்மாவின் ஆனந்த நர்த்தனம் ஜெபமானது
இயேசுவின் ஜெபம் -தவத்திலும் இனிதானது.

ஆன்மா லயம் பெறும் ஆலயம் கள்வர் குகையானது
ஆட்டு மந்தையை வேட்டையாடும்
பசுத்தோல் போர்த்திய ஓநாய்களோ
தலைமைக் குருக்களும், திருச்சங்கமுமானது

***பலியை அல்ல இரக்கத்தையே விரும்புகின்றேன்***
பொருளற்ற இறை மொழியாக
விலங்குகளும், பறவைகளும் நாளும் பலியானது
வேதியருக்கு மது, மாமிசம் விருந்தானது

சிந்திடும் குருதியும், செந்தீயில் வெந்திடும் நிணமும்
ஆலயத்தின்அழகை சிதைத்து அம்மணமாக்கிட
வெற்றுச் சடங்காய், வரண்ட சட்டமாய் யூதமதம்

சந்தையாய் மாறிட்ட ஆலயம்-இறை
நிந்தையின் இருப்பிடமானது-வேசித்தனமான
மத வியாபாரிகள்- மானுடத்தை மந்தைபோல்
ஆட்டிப் படைத்திட திருச்சட்டம் வேதமானது

கள்வர் குகையான ஆலயத்தை கூட்டிப் பெருக்கி
கோயிலாக்கிட சாட்டையால் கோலமிட்டதும்
நானும் தந்தையும் ஒன்றென்றதும்
ஆன்மீகக் கிளர்ச்சியின் புது வடிவானது

விழுந்த சாட்டை அடிகளால்
விறைத்த மனங்களின் உணர்வுகள் விழிக்க
சிவந்த முகத்தில் ஒளிர்ந்த தணல்
இருண்ட மனச்சாட்சியைப் புடம் போட்ட கனல்

*ஜெபம்
சொல்லாடல் அல்ல
சொல்வதை திருப்பி
சொல்லும்
கிளிப்பிள்ளை மந்திரமல்ல
வார்த்தை ஜாலம் அல்ல
பொங்கிப் பூரிக்கும்
தூயமனதின் இன்னிசை அது
நொருங்குண்ட இதயத்தின்
அனுராகமது
அப்பா! தந்தாய் என
அழைக்கும்
உறவின் குரல் அது.
ஆணவம் கழித்திட
தன்னை அர்ச்சனையாக்கும்
சரணாகதியது
தூய மனதின் அகப்புரட்சியது
வரண்ட சித்தாந்தங்களின்
கூப்பாடு அல்ல
ஆன்மீகப் பரிணாமத்தின்
புதிய தோற்றமது*




புள்ளினம் இசை பாடி விடுதலை எனப் பறந்திட-கால்
நடையினம் நர்த்தனமாடித் தப்பித்து ஓடிட
சிதறி நாற்திசையும் உருண்டோடிய நாணயங்கள்
கசையிலே அன்பே சிவம் எனும் நாயனம்

வாழ்ந்தறியும் சத்தியமே இறைவன்-உண்மையையும்,
அன்பையும் வாழ்வாக்கி வாழுதலே மெய் வழிபாடு-தனிமனித
ஆன்மீக கிளர்ச்சியாய் இயேசுவின் வாழ்வும், போதனையும்

வசையும், வாதையும் வருத்த-இராஜயோகியாய்
சிலுவையில் தொங்கியவர்க்கு
கர்மயோகி கண்ணனின் வேணுகானம் -ஞானயோகி
புத்தர் பெருமானின் தரிசனம் -ஆனந்த யோகமானது

அவதாரங்கள் புரிந்த ஆன்மீக கிளர்ச்சி
ஆன்மாக்களின் புதிய பரிணாமமாக
“தந்தையின் வீட்டில் உறைவிடங்கள் பல உண்டு”
புரிந்தவர் அமைதி கண்டார்
பரி பூரண சரணாகதியே இராஜயோகம் என்றார்

என் தேவனே என் தேவனே ஏன் என்னை கைநெகிழ்ந்தீர்?
சத்தியத்தை கூவியழைத்து சாந்தி கண்ட மனுமகன்
உள்ளுணர்வின் புது மலர்ச்சியில் கிறிஸ்துவான இறைமகன்
உள்ளுணர்வின் உச்சப் பரிணாமமே இறைவன்




மொழி கடந்த இறை வார்த்தை மொழிக்குள்
சிறையுண்டு சிதைபட-இறைமகன் தம்மைப் பலியாக்கி
உலகை மீட்டார் இறையிலானது
இயேசுவின் ஆன்மீகப் கிளர்ச்சி-பொருளிழந்து
பவுலால் பாதை மாறிய பயணமானது.

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-பூவுலகில்
நன்மனத்தவருக்கு அமைதி-பிறப்பிலும்,
இறப்பிலும் மாறாத நற்செய்தி-அணையாத ஜெகஜோதி
தொழுவத்தில் மனுமகனான வெறுமை
கழுமரத்தில் இறைமகனான மகிமை

கிருஷ்ணா, புத்தர், இயேசு நாமங்கள் அல்ல
உள்ளுணர்வின் அதி உன்னத நிலைகள்-
அனுபூதியில் புரிந்தவருக்கு ஆனந்தம்
ஆன்மீகம் மதம் கடந்த தேவசங்கீதம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-11-10-2023

# இறையரசு நம்முள்ளே

---



நம் உள்ளுணர்வின் உன்னதமே-நம்முள்
வாழும் இறைவன்-அனுபூதியில் அறிந்தால்
நாமும் அதுவே சச்சித்தானந்தமே

முழுமையைச் சார்ந்தது பகுதி
பகுதிகளைச் சார்ந்தது முழுமை
முழுமையும் தனியாய் சுதந்திரமாயில்லை
பகுதியும் தனித்து சுதந்திரமாயில்லை



கலைஞனும், புல்லாங்குழலும் இல்லாமல்
வேணுகானமில்லை, இறைவனும் வேணுகானமிசைக்க
வெற்றுப்புல்லாங்குழல் தேடுகிறான், தனித்து வாழமுடியாத
இறைவன் தன்னையே பல்வாய்ப் படைகின்றான்

அன்பே படைக்கும், அன்பினால் இன்புற்ற இறைவன்
தன் சாயலாய் மனிதனைப் மண்ணால் உருவாக்கி
உயிர் மூச்சை ஊதிப்படைத்தான், அவன் வெளிமூச்சிலே
படைப்பு, உள் மூச்சிலே உயிர்களின் ஒடுக்கம்

மானுட வாழ்வில் அன்பின் இரு நிலைகளாய்
நான், அது.-அன்பின் கீழ் நிலை "அது"
நான், நீ இருமையைப் படைக்க-இரு உள்ளங்களின்
அன்பு நிலை சாதாரணமானது

நான் அல்ல நீ என்பதே தெய்வீகக் காதல்
பூரண சரணாகதி- நீ எனச் சொல்ல
ஆணவத்தின் கூறாய் நான் எனும் நிலை

நானும் இல்லை, நீயும் இல்லை
இருப்பதோ வெறுமை, சூனியம் அதுவே
பரிபூரணம், முழுமை

நான்-அது எனும் நிலையில் உடல்களின் சங்கமம்
நான் -நீ எனும் நிலையில் மனங்களின் சங்கமம்
நான் அல்ல நீ எனும் நிலையில் ஆன்மாக்களின் சங்கமம்

நானும் இல்லை நீயும் இல்லை எனும் நிலையில்
சூனியத்தின் தரிசனம்."இதுவே சாஸென்"

கடவுளும் இல்லை, ஆன்மாவும் இல்லை பிரார்த்தனையும்
இல்லை, அன்பு தன் எல்லைகளை துறந்துவிட்டால்
உண்மையைச் சென்றடையும்.-கபீர் பாடுகின்றார்

உறவிற்கு இருவர் தேவை, இருமை மறைந்த நிலையில்
இருப்பது அன்பு மட்டுமே, கடவுளும் இல்லை, மனிதனும் இல்லை
ஆன்மா இல்லை, சும்மாயிருத்தல் சுகம் எனும் நிலை
அதுவே பௌத்தத்தின் தெய்வீக நிலை
மௌனத்திற்கு வார்த்தை தேவையில்லை

நாம் அறிந்தது மனம்-அறியாதது கடவுள்,
நான் என்பதே பந்தம் பந்தம், துறந்திட
மலர்ந்திடும் இன்பம், எளிய மனத்தவருக்கே இறையரசு
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்



பரவசம் கொள்ளுங்கள், இறைவன் நம்முள்
இருக்கும் உன்னதம், அறிந்தால் நம்மை நாம்
நேசிப்போம் அயலவரை நாம் நேசிப்போம்

தேடுங்கள் கண்டடைவீர்கள்-நம்மை இயேசு
கடவுளாக வேண்டுகின்றார், மலர்களல்ல
அன்பு மனங்களை இறைவன் வேண்டுகின்றான்
அன்பே மோட்சம் அதுவே இறையரசு

மனம் கழிய இதயம் மலர்கின்றது, வீடு தெரிகின்றது
அன்பின் வாசம் மணக்கின்றதா? வழிபாடு என்பது இறைவன்
பேசுவதற்கு செவிமடுப்பதே, உண்மைக்காக
துன்புறுபவருக்கே சிலுவை மரணம்

அவர்களே உயிர்த்தெழுவார்-அதுவே வீடுபேறு,
மதம் ஒரு காதல் கதை, இறைவனும்
மனிதனும் கொள்ளும் அன்பின் நிலையே-காதல் கலையே
மதம், அனுபவம் தாண்டிய உணர்வே இறைவன்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*Pax Ravichandra-11-10-2023*

# இறைமகனும் மனுமக்களும்

கொம்புகளும், வெள்ளி எக்காளங்களும் ஓங்கி
முழங்கிட-நாளும் இறை வழிபாட்டுக்கு அழைப்பு
பலியை அல்ல இரக்கமோ இறை வேண்டுவது புறக்கணிப்பு

கண்ணிற்கு கண், பல்லிற்கு பல், மதவாத நீதி
குருதியும் எரியும் நிணமும், கொழுப்பும்
இறைவனுக்கு நறுமண பலியாகும் நியதி

இறைச்சியும், கொழுப்பும்-குரு லேவியருக்கு
நாளாந்த விருந்து, பத்திலொரு பாகம்,
இறை கப்பமாக எழைகளுக்கு வாழ்வோ அவதி

ஒய்வு நாள் மோசே வகுத்த விதியாக-திருச்சாங்கம்
விரித்தும். திரித்தும் எழுதிய விளக்கங்கள் பலவாக
ஓய்வுநாள் மனிதனுக்கேயன்றி-மனிதன்
ஓய்வு நாளுக்காய் இல்லை.

கல்லில் எழுதிய மோசேயின் சட்டத்தை
கல்மனங்களில் பொறித்த மதவாதத்தை சாடிய
மாமனிதன் இயேசு-மதக்கிளர்சியாளன்?

ஒளி தேடி இருட்டில் அலைந்து-சுமை சுமந்து,
சுமைதாங்கியின்றிச சோர்ந்து, நடைப் பிணமாய் நாறிடும்
மானுடத்தை குணமாக்கி, மதவாதத்தை சாடிய
நாடோடிப் போதகனோ புதுப் புரட்சி

மதவெறியர் கைகளில் திருச்சட்டமோ கொடுஞ் சாட்டை-
மதவாத சாதியத்தில்  நாளும் மிதிபடும் ஏழைகளோ
வறுமை சப்பித்துப்பிய சக்கை

பலியை அல்ல இரக்கமே இறை விருப்பம்
மதவாதத்திற்கு அறைகூவலாக
ஒய்வு நாளைப் புறந்தள்ளி- குருடர், முடவர்,
கூனர், செவிடர்-தொழு நோயாளரைக்
குணமாக்கி மனுமகனின் ஆன்மீகக் கிளர்ச்சி



நடைப்பிணமாய் வாழும் இலாசரை
இலாசரே வெளியே வா விடுத்த அழைப்பு -அவன்
மதவாத கட்டுகளை அவிழ்த்து, மனிதநேயனாய் வாழ
உதவுங்கள், மனித நேயத்தின் அரவணைப்பு

தாடி, மீசை, குஞ்சங்களை நீளமாக்கி, வாசகப் பட்டைகளை
அகலமாக்கி-எங்கும் முதலிடம் தேடும் மதப்போலிகளை
வன்மையாய்க் கண்டித்த மனிதநேயன், பாவி, விபச்சாரிகளோடு
உண்டு, குடித்து விருந்து கொண்டாடிய நாடோடிப் போதகன்

சக்கேயுவே கீழிறங்கி வா
மானுடத்தோடு மனிதநேயம் கொண்டு வாழ்
வரிதண்டுவோனுக்கும் அவர் அழைப்பு

மதவாதமே மாறாத திமிர்வாதம் உம் பாவங்கள்
மன்னிக்கப்பட்டன, படுக்கையைத் தூக்கிக் கொண்டு
வீடு நோக்கி நட-வீடு பேறே-விடுதலை
குணமாக்கலின் உவப்பு

புயலே, கடலே அமைதி கொள்
புயல் வீசும் வாழ்வில் அமைதி நிலவிட
என் அமைதியையே உங்களுக்குத் தருகிறேன்
அருங்கொடையான அமைதி ஆனந்தப் பெருநிதி

அன்பில் நிலைத்திருங்கள்-பிறர் உங்களுக்கு
என்ன செய்யவேண்டும் என விரும்புகிறீர்களோ
அதையே நீங்களும்அவர்களுக்குச் செய்யுங்கள்
பொன் விதி தந்த பெருமான்

மிருகவதையின் இருப்பிடம்-கள்வர் குகையான
ஆலயம், தலைமைக் குருவின் அரியணை
சத்திய தரிசனத்திற்கு தடையான கல்மனை
கல்லின் மேல் கல் இராதபடி தரைமட்டமாகும்
குமுறிய முனிவனின் கொடிய சாபம்.

கல்லில் பொறித்த மோசேயின் சட்டங்கள்
கல்மனங்களில் வெற்று எழுத்தாய் நிலைக்க
அன்பு மனங்களுக்கு-அன்பே இறைவன்
அவரோ நம் தந்தை-

இறைமக்கள் நீங்கள் என் சகோதரரே
மானுட உள்ளமே இறையில்லம்
தூய மனதிற்கே சத்திய தரிசனம்
அன்பின் வேதம் அருளிய பெருமான்

அகக்கிளர்சியாளன்-மெஸாயா நான்
இறைவனுக்கு நிகராக்கி தேவநிந்தை புரிந்தவன்
கொல்லப்படல் திருச்சட்ட நீதியானது
கழுமரத்திலும் கருணை நிதர்சனமானது

*"பொய்" மைகளால் எழுதிய மதவாத*
*குப்பைகளை புறந்தள்ளிய அகக்கிளர்ச்சியாளன்*
*அறியா மையும், பொய் மையும் அழிய*
*உண் மையை தேடலாக்கிட அழைத்த சத்தியன்*

*சத்தியபுருஷன் செய்த*
*புது மை எல்லாம் அகப்புரட்சியே*
*அன்பின் எழுச்சியே!*



அறியாதோருக்கு வெளியே நடத்திய புதுமை
அறிந்தவருக்கு அகத்தில் நடத்திய புதுமை

*அவர் வாழ்வோ மனிதத்தில் புதுமை*
*திருச்சட்டம் கடந்த வேதமோ-அன்பின் அரிய அற்புதம்*
*வாழும் கலையின் நாயகனோ அன்பின் அபிநயன்*

*எல்லாப் புகழும் இறைவனுக்கே*
*இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க*
Pax Ravichandra-11-10-2023

# இறப்பு ஒரு கொண்டாட்டம்

---

உண்டு குடித்துக் கலவி செய்து உறவு வளர்த்து
காமத்தில் பிறந்து காமத்தில் மடியும்-மனிதனோ
காமப் பிறவி -விழிப்புணர்வில்லாத
நடைப்பிண வாழ்வோ துக்கத்தின் அருவி






பிறப்பு துக்கம், இறப்பு துக்கம்
மூப்பு. பிணி, சாவு வருத்திட- தொடரும்
வாழ்க்கை வட்டம்-முடிவற்ற பெருந்துன்பம்.

பிறப்பு, இறப்பிற்கு நடுவே காமம்
காமப் பிறவியின் உள்ளத்தே-ஓயாத
காம இச்சைகளின் அலைகள்

காமத்தைக் கடக்காதவரை வீழ்த்திட
காமமே மனதின் கடைசி ஆயதம்.
***காமத்தைக் கடந்து கடவுளாவதே நிலை வாழ்வு***

மரணத்தில் உடல் மரிக்க மனமழியாத நிலையில்-
சுயத்தை, மனம் தொடர்ந்து கருப்பையில் விழுந்து
புது உடல் எடுக்கத் தொடரும் பிறவிப்பிணி

மனதோடு உடல் ஒன்றித்து-மனதின் ஆசைகள்
உடலால் பூர்த்தியடைய. உடலின்றி
ஆசையில்லை-ஆசையில்லா மனிதனுமில்லை

நான் உடலல்ல, மனமல்ல அழியாத ஆன்மா-அறிந்தவனுக்கு
இனியொரு பிறப்பில்லை, விழிப்புணர்வோடு இறக்கும்போது,
உடலும், மனமும் ஒன்றாய் மரித்திட, கருப்பைக்குழிக்குள்
சிறைப்பட முடியாத பேரின்ப விடுதலை

ஆசை தோன்றும் போது சுயம் மறைகின்றது
இருளும், ஒளியுமாய்-ஆசையும், விழிப்புணர்வும்
***மனமழிந்த ஆசையற்ற நிலையே***
***ஆனந்த விழிப்புணர்வு.***

தியானத்தின் உச்சத்தில் அழியும் மனம்,
சக்தி இழக்கும் நிலையில் காம இச்சைகளைத் தோற்றுவித்திட
பேரழகிகளும், அப்ஸரசுகளும் தோன்றுகிறார்

தேடுபவன் மனதிலிருந்தே தேவதைகள் தோன்றிட
விழிப்புணர்வு மறைந்து மனம் தோன்றிட
தவம் கலைந்து தள்ளாடும் முனி

பொன்மேனி தழுவி, பெண்ணின்பம் சுவைத்து
கருப்பைக்குள் விழும் ஆசையே காமம், இறக்கும் தருணத்தில
காமம்-மீண்டும் பிறக்கும் நிலையைத் தோற்றுவிக்கும்
மடிந்த உடல் மண்ணில் மறைய-கர்ப்பத்தில்
மனம் புது உடல் எடுக்கும்.



விழிப்புணர்வோடு இறப்பவர்-மீண்டும் பிறப்பதில்லை
உலகும், பஞ்சபூத உடலும் மறைந்திட
பிரபஞ்ச இருப்போடு விழிப்புணர்வு ஒன்றிக்க
ஆன்மா எனும் தூய உணர்வாய் -சின்மயனாய் மாற்றம்
சுத்த சைதன்யத்தில் ஒன்றான தோற்றம்

தம் ஆவியை முழு விழிப்புணர்வோடு, தந்தையிடம் ஒப்புவித்து-
உடல் கழித்து, மரணம் கடந்து சின்மயனாய் -இயேசு
***தாய் தந்தையின்றி-தம்மை தாமே***
***கிறிஸ்துவாக பிறப்பித்துக்கொண்ட அற்புதம்***
சிலுவையில் நிகழ்ந்த பரிநிர்வாணம் (*Christo Genesis*)

ஊனுடலில் சிறைப்பட்ட ஆன்மாவின் விடுதலையே உயிர்ப்பு
விழிப்புணர்வையும், மரணத்தையும் ஒன்றாய் இணைத்தவர்
“ஞானம்” பெற்றார்

விதை மடிகின்றது- நாற்று முளைக்கின்றது
விதையும், நாற்றும் சந்திப்பதில்லை
மனிதர் பார்க்கும் தளத்தில் இருக்கின்றார்
குரு பார்வை கடந்த நிலையில் இயங்குகின்றார்

விழிப்புணர்வால் வாழ்வைத் திருவிழாவாக்கியவருக்கு
இறப்பும் பெருவிழாவே, ***இருப்பவர் நாமே இருப்பின் திருநாமம்***
ஆபிரகாமின் தேவன், யாக்கோபின் தேவன்
***மரித்தும் வாழும் மனிதர்களின் தேவனே-இறைவன்***

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-11-10-2023

# இயேசு ஒரு ஸென் குரு

---

அவதார புருஷர்களின் வாழ்வில்
அற்புத விழிப்புணர்வே ஒளிரும் உண்மை
நதி மூலம் வேறானாலும் சங்கமிக்கும் கடல் ஒன்றே
ரிஷி மூலம் வேறானாலும் சத்திய தரிசனம் ஒன்றே

பக்தி யோகம், ஞான யோகம், கர்ம யோகம்
இராஜ யோகம் பாதை காட்டிய மாபுருஷர்களில்
மைத்திரேய புத்தராய் இருப்பெனும் பெருங்கடலில்
எழுந்த பேரலையில் ஒன்றாய் பெருமான் இயேசு



***“என்னைப் பின் செல்”–“வந்து பாருங்கள்”***
மண், பொன், பெண் தேடல்களை கடந்து
சத்திய தரிசனம் காண அவரின் மகத்தான அழைப்பு

ஆணவ மனம் கழித்து-ஆனந்த  விழிப்புணர்வைச்
சொந்தமாக்கும் சீடன், ஆணவ மனம் அழித்திட
குருவின் அருள், வித்து மடிந்து நாற்று முளைத்திட
இரண்டாம் பிறப்பின் எழில்

மண்ணில் பாதங்களும், விண்ணில் சிரசுமாய்
மணிமுடி தேடும் மானுட உலகில்
சீடர்களின் பாதங்களை கழுவித் துடைத்து
***குண்டலினி சக்தியை தூண்டி எழுப்பிட***
***அன்பின் வேள்வியாய் குருவின் பாத*** பூஜை-

பணி வாழ்வின் போதனை எனக் கற்றவருக்கு
ஆன்மீகத்தின் நுட்பக் கலை-பாத பூஜை
அறியப்படாத ஒன்றானது

**இங்கிருங்கள்** *(Sit here)* **இருத்தல்** என்பது ஸென் மொழியாக
மனதாலும், மெய்யாலும் அசையாத  ஆழ்நிலைத் தியானமாக -(ZA Zen)
***சும்மா இருக்கும் நிலையாக,*** குருவின் மொழி புரியாத சீடர்கள்

மூன்று சீடர்களோடு முன்னே சென்றவர்- தன்னோடு விழித்திருந்து
ஜெபிக்க அழைத்தார் ***விழித்திருத்தல்– விழிப்புணர்வைக்*** குறிக்க
அவர்களோ தூங்கிப்போனார்கள், விழிப்புணர்வின் வேறுபட்ட
தளங்களில் குரு, சீடர்களின் உள்ளுணர்வுகள்

விழித்திருத்தல் (Mindfulness) தூங்காமல்
இருத்தல் ஆன துன்பம் (Vigil)
உள்ளுணர்வில் இறைமகனாய், உடல் உணர்வில்
மனுமகனாய் , மனிதனையும், இறைவனையும் இணைக்கும்
அற்புத ஆன்மீகப் பாலமாய் இயேசு

தன்னுள் இருக்கும் மனு, இறை தன்மையோடு
இரு முனைகளின் உரையாடலாய் அவர் ஜெபம்

“கூடுமானால் தந்தையே இந்தத் துன்பக்கலம்
என்னை விட்டு நீங்கட்டும், ஆயினும் என் சித்தமன்று
உம் சித்தம்மே நிறைவேறட்டும்”
பரிபூரண சரணாகதியே அவர் இதயகீதம்



மண், விண்ணோக்கிக் கதறிட-உடலும், ஆன்மாவும் ஒன்றாகி
உன்னத ஒத்திசைவில் நடனமாடிடும் அருங் காட்சி
விழிப்போடு காண்பவருக்கு
விழிப்புணர்வு தவமின்றி வரமாகும் மாட்சி

ஒரு முறை தவற விட்டவர்களுக்காய்-மும்முறை
ஜெபித்த குரு-சீடரோ ஊனுடம்பில் நிலைத்து-உன்னத
விழிப்புணர்வைத் தூங்கித் தவறவிட்டார்

மரணத்தை முழு மனதோடு எதிர்கொண்ட
மனுமகன்- “படை வீரர்களிடம்
***“யாரைத் தேடுகிறீர்கள்” வினவிய திருமகன்***

காட்டிக் கொடுக்க முடியாத தனித்துவ இருப்பு
தன்னை தானே காட்டியது, கைது செய்ய முடியாத
விழிப்புணர்வு, விருப்போடு தன்னை கையளித்தது

மண் விண்ணிடம் சரணடைய-உடல்
ஆன்மாவிடம் தஞ்சமடைய -மனுமகன்,
இறை மகனிடம் சரணடைந்த பொழுதது

மரணம் உடலுக்கேயன்றி ஆன்மாவிற்கல்ல
உண்மையை அறிந்த குரு
விழிப்புணர்வோடு தம்மை கையளித்த திரு

“எல்லாம் முன் எழுதியபடி நிறைவேறுகின்றது”
தம் மரணத்திற்கு எவரும் காரணமல்ல
யாரையும் குற்றவாளிகளாகத் தீர்ப்பிடாத
பரிபூரண அன்பின் அறிக்கை அது

யூதாஸ் ஸ்காரியோத் இறை லீலையில் ஓர் பாத்திரமே
சீடர்களும் கைவிட்டு ஓடிட ***எல்லோரும் கைவிட்ட அவல நிலையில்***
***அவர் மரணம் உள்ளத்தில் நடந்தது-மறுநாள்***
***விசாரணையும், தீர்ப்பும் உடலுக்கு நிகழ்ந்தது.***

சாரமற்ற உப்பான நட்பு, சீடத்துவமோ எண்ணெயில்லாத் தீபமானது
உண்மை அன்பின்றி உள்ளம் மரித்திட  உடலுக்கே திருச்சங்கமும்,
பிலாத்தும் மரணத் தீர்வையிட்டார்

ஆழ்ந்த இசையொத்த இயேசுவின் மௌனம்
பிலாத்துவை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது
மௌனமே உண்மையின் மொழி-
சத்திய அனுபவம் மொழி கடந்த தேவகானம்
தூய மனதிற்கே சத்திய தரிசனம் சாத்தியம்.

***புரட்சியாளனாய் இயேசுவின் தோல்வி***
***ஆன்மீகக் கிளர்சியாளனாய் அவர் தனிப் பெரும் வெற்றி***
***ஆன்மீகம் தனி மனித பயணம்***




பூரண சரணாகதியடைந்த-எளிய
எவ்வித ஆற்றலுமற்ற தனி மனிதனாய் மடிந்தது
இயேசுவின் மாபெரும் வெற்றி

கிளர்ச்சியாளன் தனி மனிதன்-
புரட்சியாளனோ கூட்டம்
லெனின், மாவோ, மகாத்மா வெற்றி பெற
தனி மனிதன் இயேசு தோற்றுப்போனார்

இறைவனே அவர் துணை-இறைவனே அவர் இருப்பு
தன்னுணர்வின் பரிபூரண சுதந்திரமே அன்பு
***எல்லைகளற்ற அன்பே இறைவன்***

என் தேவனே, என் தேவனே ஏன் என்னைக் கை நெகிழ்ந்தீர்?
இயேசுவின் ஆதங்கமான குரல் தனித்தே ஒலித்தது
பதில் நோக்கிய வேண்டுதல் அல்ல அது
எந்த எதிர்பார்ப்பும் இல்லாத இதயகீதம் அது

மனமோ, புத்தியோ புரியக்கூடிய எதிரொலிகளே
மானுடர் கேட்பவை விழிப்புணர்வுள்ள இதயங்களுக்கே
புரியும் இருப்பின் மௌன மொழி



இருப்பின் இறுதி ஆணவத் துளியும் மறைந்திட
விதை மடிந்து துளிர் கிளம்பிட
இயேசு, கிறிஸ்துவாய் மலர்ந்த புதுப்பிறப்பு
அதுவே இருப்பின் பதில்

மொழி, மனம் தாண்டிய மெய்யனுபவம் பதிலானது.
***உம்மை நான் கைவிடவில்லை-உம் இருப்பாய் நானே***
***நானே நீயாக உம்மை கைநெகிழ்வது எங்ஙனம்?***
***சுடர் அணைந்து மறைந்தது- போனவிடம் யாரறிவார்?***

விஞ்ஞான பாதையில் பதஞ்சலி முனிவர் பயணிக்க
ஞானவழியில் புத்தர் பெருமான் தியானிக்க
யோகநெறியை கண்ணன் இசைக்க
அன்பே உயர் நெறி-அதுவே இயேசுவின் நெறி

வாழ்வும், போதனையும் ஒன்றாக-
தொழுவம் தொடங்கி- கழுமரம் வரை-அன்பை
வாழ்ந்து காட்டிய கருணாநிதி இயேசு

அன்பு மரணம் கடந்தது-அன்பு முழுமையானது
வாழ்வு அன்பில் நிலைத்திருக்கின்றது
அன்பே மன்னிக்கும்-அன்பே மனந்திரும்பும்
அன்பில் நிலைந்திருந்தால்
மரணம் ஒரு மாயை அறிவீர்கள்

இயேசு இருமுறை மரித்தார்
யூதர்கள் சிலுவையில் அறைந்து கொன்றதோ ஒருமுறை
அவர் உயிர்த்தெழுந்தார்-மறுமுறை
கிறிஸ்தவ பிரிவினை அவரைக் கொன்றிட
அவரால் உயிர்த்தெழ முடியவில்லை
உண்மை மறைந்துபோனது.

***வாழும் கலை இயேசு***
***உருமாற்றத்தின் உன்னதக் கலை***
***மீண்டும் பிறக்கும் அதிசயக்கலை***

வாழ்வை கலைநயத்தோடு வாழ்ந்து இரசித்த மாகலைஞன்
உரைக்கும் மொழியும் கவிதையாக, உண்ணும் முறையும்
அருங்கலையாக சீடர்களுக்கு அதுவே
அவரை அடையாளம் காணும் வழியானது.

நானும் தந்தையும் ஒன்றே
ஆபிரகாமிற்கு முன் நான் இருக்கின்றேன்
வழியும், உண்மையும், வாழ்வும் -நானே
இதோ உலகு முடியும் வரை எந்நாளும் -நான்
உங்களோடு கூட இருப்பேன்
“நான்” என்பது
உன்னத விழிப்புணர்வு நிலையாக
( *Christ Consciousness* )
நம்முள் இறைவனாய் அவர் வாசம்
அறிந்தவர் தெளிந்தார் அறியாதோர் அவர்
மறுவருகைக்காய் ஆண்டுகள்-இரண்டாயிரம் கடந்தும்
வெறுமனே காத்திருக்கின்றார்

என் பின்னே வாருங்கள் இன்றும் அவர் அழைப்பு
மண், பொன், பெண் தேடி-ஆழமற்ற கரையில்
ஆசை வலையோடு அலையாமல்-உள்ளத்தின்
ஆழத்தில் உங்கள் வலைகளை வீசுங்கள்

***கிறிஸ்து விழிப்புணர்வு உங்களுக்குள்ளே***
***உங்களில்தான் என் மறுவுருகை***
***நீங்களும் கிறிஸ்து –தத்துவமஸி***

*Buddha’s and Jesus Christ’s original face are crystal clear*
*in front of everyone.*
*It was buried in a shallow grave,*
*no one knew a blue-eyed One abides in this body.*

உண்மை சொந்த அனுபவமாகாதவரை
இறைவனை தரிசிக்க முடியாது
“உண்மையை”
வார்த்தைகளால் விபரிக்க முடியாது

வார்த்தை கடந்த மெய் அனுபவமே சத்தியம்

அன்பே சிவம்-வாழ்வே தவம்
இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க
Pax Ravichandra-11.10.2023

# இயேசு என் சகோதரன்

---




“நான்” எனும் ஆணவ உணர்வாய்,
நாம, ரூபமாய் என்னை நான் அறிந்திட
நாம ரூபம் கடந்த ஆன்மா நீ
இறைவன் நம் தந்தை-நாம் ஒரு குடும்பம்
நான் உன் சகோதரன் உன் போதனை



ஆணவம் கழிந்த நிலையில்-நீயும் இறைமகன்
பாவியல்ல நீ-அழியாத சின்மயன்
விலைமதிப்பில்லாத இறையரசு உன்னுள்ளே
வாழ்ந்தறிவாய் -சிலுவையில் உன் சாதனை

என் சித்தமன்று-தந்தையே உம் சித்தம் நிறைவேறுக
ஆணவம் கழித்த பூரண சரணாகதியே
இறையரசின் வழி-வாழ்வாலும்,
வார்த்தையாலும் கற்றுத்தந்த நெறி

கணந்தோறும் விழிப்புணர்வோடு வாழ்
ஊன் வளர்ப்பதோ உணவு
ஆன்மா நீ என வாழ்ந்து அறிந்திட
இறை வார்த்தையை உணவாக்கு

எதிரியையும் அன்பு செய்து கருணையை வாழ்வாக்கி
-இருமை கடந்து, அன்பினால் இன்புற்று அன்பு மயமாகு
அன்பே சிவம்-அதுவே இறைதன்மை

ஆணவமே சோதனை-விழிப்பாயிரு
ஆசையே, மனம் சிருஷ்டிக்கும் தீமை
காமத்தையும் அறிந்து கடந்து போ-கடவுளாகி
இருப்போடு ஒன்றாகி இருப்பாய் இன்புறு

இருப்பது சச்சித்தானந்தம், அனுபூதியில் அறிந்து
ஊதாரி நான் வீடு வந்து சேர்ந்திட -உன் அழைப்பு
வழியும், உண்மையும் , வாழ்வுமான நீயே
வாயில் தந்தையும், தாயுமாய் நிற்கும் ஆனந்தத் தவிப்பு
என்னே என் பேரின்பம்!, என்னே நின் கருணை!

***அன்பே சிவம்- வாழ்வே தவம்***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-11-10-2023

# அன்புச் சீடர்கள்

---

| Apostle | Description | Method of Death |
|---|---|---|
| Andrew | Brought his brother, Peter, to Jesus. | Crucified on X-shaped cross |
| Bartholomew or Nathanael | Introduced to Jesus by Philip. | Flayed alive with knives |
| James the Elder | Son of Zebedee and Salome. | First disciple martyred |
| James the Lesser | Younger James. A man of strong and fiery character. | Sawed in pieces |
| John | Described as Jesus's beloved disciple. At the cross Jesus turned his mother over to John. | Died of natural causes on Isle of Patmos |
| Judas | Betrayed Jesus for 30 pieces of silver. | Hanged himself |
| Matthew, also called Levi | Tax collected who was despised. | Martyred |
| Peter | Always with Jesus. Tried to walk on water. | Crucified upside down |
| Philip | Followed Jesus after hearing just two words: "Follow me." | Died by hanging |
| Simon the Zealot | A fisherman who became a fisher of men. | Martyred |
| Thaddeus | Skeptical of Jesus at first. Asked: "Can anything good come out of Nazareth?" | Killed with arrows |
| Thomas | Doubted Jesus and was told to place his hand in Jesus's piercings. | Killed with a spear |

ஆன்மீக உலகின் அற்புத குருவாய்
தனி மனித அககக்கிளர்ச்சியாளனாய்
இளம் யோகி இயேசு கிறிஸ்து



மூன்று வருட இறை பணியில்-மீனவரையும்,
லேவியனையும் சீடராய்த் தெரிந்த பெருமான்
கூழாங்கற்களை வைரங்களாய் மாற்றிய அம்மான்

***வழியும், உண்மையும், வாழ்வும் நானே***
என் பின்னே வாருங்கள், வந்து பாருங்கள் என்றே
சத்திய தரிசனம் காண அழைத்த கிளர்ச்சியாளன்
தன்மை இறைவனுக்கு நிகராக்கி
இறை நிந்தை செய்தாரென்று-மதவாதிகளால்
கொல்லப்பட்ட மதப்புரட்சியாளன்



மரணத்தை கடந்து உயிர்த்த அமரன்
உலகெங்கும் நற்செய்தியைப் பரப்பிட
பணித்த இறை மகன்

முத்தமிட்டு காட்டிக் கொடுத்த யூதாஸ் ஸ்கரியோத்
முழுமனதோடு வருந்தியழுது மனந்திருந்திருந்தி
இறைமகன் இல்லாத உலகில் இனி வாழேன் என்றே
தூக்கிட்டுத் தன்னுயிரை மாய்த்த அன்புச் சீடன். (1)

ஏழை மீனவன் என்னையும் அழைத்த பெருமான்
இறையருளால், இறைமகன் எனச் சான்று பகிர
பேதுறு என பெருமையோடு புதுப்பெயர் சூடி
குருவால் பாராட்டுப் பெற்ற அடியான்



மரணம் வரை உம்மைப் பின் தொடர்வேன்
இயம்பிய வீரன்-அறியேன் என அஞ்சி
குருவை மும்முறை மறுதலித்த கோழை

வருந்தி-மனம் திரும்பி-வாழ் நாளெல்லாம்
இறைமகன்-இயேசு எதிர்பார்த்திருந்த மெஸியா
அஞ்சாமல் சாட்சியம் பகிர்ந்த வீரன்-

முதிர்ந்த வயதில் ரோம் நகரில்
தலைகீழாகச் சிலுவையில் அறைபட்டு
மரித்த பேதுருவோ தலைமைச் சீடன்(2)

உயிரோடு தோல் உரிக்கப்பட்டு-அரேபியாவில்
தலைகீழாக அறையப்பட்டு மரித்தவரோ
பர்தலோமியஸ் எனும் நத்தானியேல் (3)



பட்ராஸ் நகரில்- புள்ளடி வடிவான சிலுவையில்
அறையப்பட்டு கொலையுண்டவரோ
பேதுருவின் சகோதரர் " அன்ரூ"(4)

மன்னன் ஏரோதால் யூதேயாவில்
தலை வெட்டப்பட்டு கொலையுண்டவரோ
யோவானின் சகோதரர் ஜேம்ஸ் (5)

இங்கிலாந்தில்-ரோமர்களால்
சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டவரோ
தீவிரவாதி சீமோன் (6)

பெய்ரூட் நகரில் வேதசாட்சியாய்
கொல்லப்பட்டவரோ யூதா ததேயு (7)

தென் இந்தியாவில் -மைலாப்பூரில்
ஈட்டியால் குத்திக் கொல்லப்பட்டவரோ
சிந்தனையாளர் தோமா (8)

கோயில் முகப்பில் நின்று தள்ளப்பட்டு
தடிகளால் அடித்து கொல்லப்பட்டவரோ.
யூதாவின் சகோதரர் இளைய ஜேம்ஸ் (9)

பிலிப் ஹைரோபோலிஸ் நகரில்
சிலுவையில் அறையுண்டு மரித்தார்.(10)

நற்செய்தியாளர் மத்தேயு
பாரசீகத்தில் கொல்லப்பட்டார்.(11)

கண்கள் குருடாக்கப்பட்டு- பாலஸ்தீனத்தில்
கல் எறிந்து கொல்லப்பட்டவரோ
புனித மத்தியாஸ்.(12)

இறைவாக்கே மனுவுருவானது-இயம்பிடும்
நற்செய்தியை எழுதிய பிரிய சீடர் யோவான்-
பத்மோஸ் தீவுக்கு நாடு கடத்தப்பட்டு
நூறாண்டு வாழ்ந்து மரித்தார் (13)

பூதவுடல் அழிந்தும் புகழுடம்போடு வாழும்
-சீடத்துவமோ, அமரத்துவம்

யாம் பெற்ற பேறு யார் பெற்றார் இவ்வுலகில்?
மரணத்தை வென்று உயிர்த்த அமரனை,
வானவன் மகனை வணங்கப் பேறு பெற்றோம்
தவமின்றிச் சீடத்துவத்தை வரமாய்ப் பெற்றோம்

வழியும், உண்மையும், வாழ்வுமான
வார்த்தையோடு வாழ்ந்து வாழும் கலையை
வாழ்ந்தறியப் பேறுபெற்றோம்-ஊனுடல் அழிய
உண்மைக்குச் சாட்சியம் பகிரப் பேறுபெற்றோம்

கருணையின் ஒளி கழுமரத்திலும் பிரகாசித்தது
வைதாரையும், வதைப்போரையும் மன்னிக்க வேண்டியது
நல்ல கள்வருக்கு பரகதியை அளித்த கருணை
நற்தாயை எமக்கு உவந்தளித்த கிருபை

உலகெங்கும் நற்செய்தி சொல்லி
இறைமகன் சீடர் என்றே இன்புற்றோம்
துன்புற்று மடிந்தாலும் துயர் எமக்கில்லை
இன்புற்றே இறை மகனோடு வாழ்கின்றோம்

விதையோ இறைவார்த்தை-தூவிடும் ஞான உழவனோ
மனுவுருவான இறைவார்த்தை, நல்மனத்தவருக்கே அமைதி
அமைதியே இறை வார்த்தையின் வெகுமதி
மனமழிந்தால் அமைதி-அமைதியே ஆனந்த சுதந்திரம்
அதுவே மோட்சம்

***அன்பே சிவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

Pax Ravichandra-11-10-2023

# கடவுளின் காதலி



மண்ணால் மனிதனைப் படைத்து
மானுடன் துணைவியை
மனிதன் இடது விலா என்பிலிருந்து
படைத்த அர்தநாரீஸ்வரன்



சீத முழுநிலவோ, செங்கமலப் பேரழகோ
போதவிழ, தாதவிழும் பூவாசம் பூ மேனியில் வீச
பூவழகெல்லாம் பூவையழகாக-பூவால் தொடுத்த
பூங்கதம்பம் ஒப்ப பூங்கோதை

கலை கடந்த காவியமாய், கண்கவர் ஓவியமாய்
உயிரில் கலந்த உயிராய்-காமன் மலர்க் கணையாய்
ஆண்மகன் என்பில் பிறந்த இனியவள்-படைத்த
இறைவனோ மாகலைஞன், மாதொருபாகன்.

ஊனின் ஊனாய்-என் என்பின் என்பாய்-என்
இதயக்கோயிலின் தேவதையே ஏவாளே,
கவிஞனாய் மாறி -ஆதாம் பாடிய
உலகின் முதல் காதல் கீதம்.

தனிமைத் துயரால் வாடிய நெஞ்சம், நீரோடை தேடும்
கலைமானாய்த் தவித்திட, தனிமைக்கு கன்னியே அருமருந்து
காதலே பெருவிருந்து -படைத்தவனும்
காமத்துப்பால் சுவைத்தவனோ?






மறக்கமுடியாத காதல் மனதை வருத்த
மனதை கொள்ளையிட்ட கன்னியின் சாயலில்
மங்கையைப் படைத்தே இறை மனம் துடிக்க-அவன்
இதயத்திலும் ஆறாத காதற் காயங்களோ?

குத்தி திறந்த இயேசுவின் இதயமும்-கடைசி
குருதித்துளியை சிந்தி-மானுடர்மேல் கொண்ட
மாறாக் காதலைத்தான் சொல்லியதோ?

ஆணவம் கவர்ந்த அன்புக் காதலியைத்
தேடி வந்த காதலனோ இயேசு?-காதலுக்காய்
உயிர் ஈந்த தெய்வீக காதல் இதுதானோ?

ஓயாது இதயம் துடிக்க, உருகி ஊனும் என்பும்  காதல் கனலில்
வெந்து தவிக்கும், காதலின் வலியை அறிய-ஓ மானுடரே
***காதலில் விழுந்து பாருங்கள்***
***நம்மில் பாதி பெண் என்பதும் புரியும் காமம் கடந்திட***
***நாமும் கடவுள் என்பதும் தெளியும்***





விலக்கப்பட்ட கனியை உண்ணத்தந்து
அறிவைத் தூண்டிய காதல் கன்னி
கடவுளைபோல் காதலர் நாமும் மாறிட
கனவு கண்ட காதல் கனி

மண்ணால் ஆணையும்-மணாளன்
என்பால் பெண்ணையும் படைத்த இறைவன்
அழியாத தன் காதலை இன்றும் சொல்லும்
காதல் கதைதான் மானுடப் படைப்போ?

மாதவளை மண்ணால் படைக்காமல் -இதயத்தை
காத்திடும்-இடது விலா என்பினால் படைத்து-
காதலுக்கு அழிவில்லை என்றான்
காதல் காவியத் தலைவன் இறைவன்




ஒரு கணம் பிரிந்ததற்கே ஓயாது மனம் துடிக்க
ஒரு கணமேனும் பிரியாமலிருக்க-உமையொரு பாகனாய் மாறி
காதலே அன்பின் வேதம் என்றான் ஈசன்



***காதல் சாவதில்லை-காதலரே***
***சாவதும் காதலில்லை***
***காதலே அன்பின் வேதம்***

***கடவுளின் காதலி மானுடர் நாமே***
***அறிந்தால் நாமும் கடவுளே***

ஹரியோ திருமகளை நெஞ்சில் வைத்தான்
பிரம்மனோ கலைமகளை நாவில் வைத்தான்
மலைமகளை பாதி உடலில் வைத்த
மாதோருபாகனோ மஹாதேவன்

உயிர், மெய் கடந்து உள்ளுணர்வில் வாழும்
அன்பாய் இயேசு கிறிஸ்து
***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
Pax Ravichandra- 11-10-2023

# கைகாட்டி மரங்கள்

---





வாழ்க்கை ஒரு தீர்த்த யாத்திரை.
சுயத்தை அறியும் சத்திய சோதனை
மெய்சார்ந்த தேடல் அது
சார்பு நிலை உண்மைகளே நம் தரிசனம்
தூய மனதிற்கே சத்திய தரிசனம்

அவதார புருஷர்கள்-கைகாட்டிகளேயன்றி
வழிகாட்டிகள் அல்ல-செல்லும்
பாதையின் திசையை சுட்டும்-கைகாட்டி
பயணிப்பதில்லை-பயணி தன் பாதையை
கண்டு கொள்ள உதவும் ஒளிச்சுடர்

கிருஷ்ணா-புத்தர்- மகாவீரர்
இலாவேட்ஸீ ஓஷோ எல்லாம் நம்முள்ளே-
கட உள்ளே- நாம் கடவுளே

அனுபூதியில் உண்மையை அறிந்தவரோ மெய்ஞானி
மெய்ஞானிகள் சிந்தனையாளர்கள் அல்ல
சிந்தனையில் பிறக்கும் தத்துவம் இறுதி முடிவல்ல
முரண்பட்ட தத்துவங்கள் -இன்றும்
முடிவில்லா விவாதங்களின் பிறப்பிடங்கள்




வான் நிலவை, கடலில், குளத்தில், கிணற்றில
காண்பவர் பலர்-நிலவோ என்றும் வானில்
***ஏகம் சத் விப்ரா பகுதா வதந்தே***
சத்தியம் ஒன்றே-வழிகளோ பல

வேதங்களை நிராகரித்த பெருமான் புத்தர்
***நான் சொல்வது என்பதால்***
***வேதம் சொல்வது என்பதால்-முன்னோர்***
***பாரம்பரியம் சொல்வது என்பதால்***
***எதையும் நம்ப வேண்டாம்***
***உண்மையை நீங்களே வாழ்ந்தறியுங்கள்.***

***உண்மை உங்களுக்கு விடுதலை அளிக்கும்***
***இயேசு பெருமானின் செய்தியும் அதுவே***
நம் தரிசனங்கள்-பிறரின்
குவியத்தூரத்திற்கப்பால் விழும்போது
காட்சிகள் தெளிவாதில்லை

ஏற்பதும் மறுப்பதும் அவரவர் சுதந்திரம்
ஆணவம் கழித்த மனமே சுதந்திரம்

உண்மைக்கு எல்லைகள் இல்லை
சிகரங்களை தொடும் பயணத்தில்
சிறகு முளைத்தது எழும்பிப் பறக்கும்
சிறு பறவைகளாய் நாம்



இயற்கையில் பாரபட்சம் என்பது இல்லை
நல்லோர் -தீயோர்-இருமை கடந்து
கணந்தோறும் உதிக்கும் கதிர்-பருவ
காலத்தே பொழியும் மழை, வீசும் காற்று

ஐம்பெரும் ஆற்றல்களும் இருமை தாண்டி
தெரிதலைத் தாண்டி நிற்கின்றன.
நன்மையும், தீமையும் கலந்ததாய் உலகு
உணவின் ஒரு பகுதி மலம்-மலமும் மண்ணிற்கு உரம்

வாழ்க்கை அழகானது
நாம் சோகங்களில்-மூழ்கிக்கிடக்கின்றோம்
உண்மைக்கு சாட்சியங்கள் தேவையில்லை
விழிப்புணர்வே தேவை

ஆண், பெண் உறவால் அவதார புருஷர்கள் தோன்றுவதில்லை
அவதார புருஷர்கள் இருப்பின் அடையாளம்
உடல்கள் பிறக்கலாம்- விழிப்புணர்வு பிறப்பதில்லை
மனிதன் அப்பத்தினால் மட்டும் வாழ்வதில்லை
காமம் பலவீனத்தின் அறிகுறி-காதலோ பலத்தின் நெறி




கடையில் இருப்பது சிலை-கோயிலில் இருப்பதோ தெய்வம்?
உள்ளம் கோயிலானால் வாழும் தெய்வங்கள் நாம்
உள்ளம் அங்காடியானால் கள்வர் குகையோ நாம்

ஆணவம் கழித்த சூனியமே தெய்வீகம்
மரித்தோரை, எரிக்கவும் புதைக்கவுமே சுடுகாடு
ஆணவ மனதை எரித்தால் அதுவே நிலைவாழ்வு
சொர்க்கம், நரகம் தாண்டியதே-மோட்சம்

தெய்வீகமே வாழ்வு –***விழிப்புணர்விற்கு***
தியானமும், பரிபூரண சரணாகதியுமே வழி



பரிணாமம் தொடர்கின்றது- அகமாற்றங்களாய்த்
பரிமாணங்களில் அதன் நீட்சி-வளர்ச்சி-தொடர்ச்சி
புத்தர்-இயேசு-என் தாய் -உன் தாய்
அன்பின் அழகிய பரிமாணங்கள்

வசையும்- வாழ்த்தும் துறந்து-மாலையும்,
கல் வீச்சையும் கடந்து-வழிப்போக்கனாய் நம் பயணம்
அவலங்களுக்காய்- அநீதிகளுக்காய்
அல்லலுறும் மானுடத்திற்காய் நம் குரல்

சேவல் கூவி பொழுது விடிவதில்லை
விடியும் பொழுதை வரவேற்கும் பூபாளம்
புரிந்தவர் இரசிகின்றார்-புரியாதவர் பரிகாசிக்கின்றார்
கூவாமல் இருப்பது சேவல் இல்லை

தூங்கிக் கிடக்கும் நம்மைத் துயில் எழுப்பும் சுப்ரபாதமே
அவதார புருஷர்களின் தேவகானம்

காட்டு ரோஜா யாருக்காவும் மலர்வதில்லை
மணம் வீசுவதில்லை -அமுதைப் பொழியும்
வான் நிலவு தனியாய் காய்கிறது-கைதட்டலுக்காய்
குயில் பாடுவதில்லை, கலாபமயில் ஆடுவதில்லை
அதனதன் அழகு, இயல்பு பண்பு அது




***மனமழிந்து சும்மா இருக்க , காலம் கனிய-***
***மழை பொழிய-புல் தானாக முளைக்கின்றது.***
கதிர் ஒளியைச் சிந்த
நிலவோ அமுதைப் பொழிகின்றது

எழுச்சி, வீழ்ச்சிகளை கொண்டது வாழ்வு
விழுந்தபோதெல்லாம் சோர்ந்துவிடாமல்
மீண்டும் எழுவதே முயற்சி

அழைப்புக்கள் மாறுபட்டவை
கேட்கச் செவியுள்ளவனுக்கே குருவின் குரல்
தயாராகும் சீடனுக்கே குருவின் தரிசனம்

ஆணவமழித்தலே குரு உபதேசம்
சிற்பியின் உளியே சிலை செதுக்க உதவும்
உளியின் செதுக்கல் வலியல்ல, வலிமை

புண்களை ஈக்கள் தேட-புது மலர்களை
தேனீக்கள் கண்டு ஆட-வாழ்க்கை
பூக்களை ஈக்கள் மொய்ப்பதில்லை
பிணங்களை சுற்றியே கழுகுகளின் கூட்டம்

சத்தியம் தரிசனமேயன்றி தர்க்கிக்க தத்துவமல்ல
*Truth is the exact correspondence with reality*
*Truth is the correct equation between the thing and the thought.*

***வார்த்தையால் சொல்ல முடியாதது உண்மை***
***உண்மையை எச்சில் படுத்துவது- பொய்மையே***
***உண்மை ஒரு தரிசனம்-அனுபவம்.***

நட்பின் யாத்திரை-அழகிய சத்திய சோதனை
பயணம் ஒன்று-பாதைகள் வேறு-
உண்மை நாம் சென்றடையும் வீடு
வளர்ச்சிக்கே விமர்சனம்
முரண்பாடுகளே சக்தியை தோற்றுவிக்கும்
நேர்- எதிர் முனைகளின் இணைப்பே
சக்தியின் தோற்றம்




***எங்கும் ஒளி பரவட்டும்-***
***லோக சமஸ்தா சுகினா பவந்து-***
***இன்பமே சூழ்க எல்லோரும் நலமே வாழ்க***
***சப்பே தத்தா பவங்க துதி தத்தா.***
***எல்லா உயிர்களும் நலமாய் வாழ பிராத்திக்கின்றேன்***

ஷலோம்.-அமைதி-சமாதானம்
இறைவனின் பெரும் தானம் சமாதானம்.
சிலுவை மரம்-போதி மரம்
நிறை வாழ்வின் அழகிய குறியீடுகள்
எல்லா மரங்களைவிட-அதிக
பிராண வாயுவை வெளிவிடும் போதி மரம்
சுவாசக்காற்றாய் போதி மாதவன்

***பிரம்மம், மாயை சந்தித்த***
***காலம் நித்தியத்தை சந்தித்த குறியீடு-சிலுவை***
காலம் மனிதனையும்,
நித்தியம், இறைவனையும் குறிக்கின்றது

மனிதன் இறைவனாவதே பரிணாமம்
தூங்கிக் கிடப்பதோ மனிதனின் கிடை நிலை
விழிப்புணர்வோ நிலைகுத்து நிலை

இயேசுவின் வாழ்வே ஆதாரம்
அறிவுக்கனியை கழித்த புதிய ஆதாம்
வாழ்வுக் கனியாய் மலர்ந்த இயேசுவோ-கிறிஸ்து

இயேசு கைகாட்டி மரமல்ல-மைத்திரேய புத்தர்
மானுட சுக துக்கங்களில் பங்கு கொண்ட மனிதநேயன்
நம்மோடு இன்றும் பயணிக்கும் கருணை
வாழ்வு எம்மாவுஸ் பயணம்-




புல்லாங்குழலும், போதி மரமும், சிலுவையும்,
மரங்களாய்த் தோன்றினால்
**மரத்தை மறைத்தது மாமத யானை**
**மரத்தின் மறைந்தது மாமத யானை**
**பரத்தை மறைத்தது பார் முதற்பூதம்**
**பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமமே-** திரு மூலர்

*Let us seek the path of holiness, the path of strength,*
*the path of consecrated action.*
*These thoughts of my innermost soul that I sing,*
*it mattered not whether they be in rhyme, rhapsody, or prayer.*
*The songs of the soul are not made of words.*
*The true singers sing not with their voice or tongue-*
*But with feelings which are beyond utterance.*

**சத்தியத்தின் குரல் சாஸ்திரிய சங்கீதம்போன்றது**
**பிரபஞ்ச கானமது-சத்திய தரிசனமது**
**சாஸ்திரிய சங்கீதத்தை இரசிக்க ஞானம் தேவை**
**வார்த்தைகளுக்கு அப்பாற்பட்ட தரிசனத்தின் உணர்வு.**
**ஓங்காரத்தின் மென்மையான அதிர்வு.**

Amicus Plato, sed magis amica veritas

*Plato is my friend, but the truth is a better friend*
*(Literally: Plato is friend, but the truth is more friend (to me than he is))."*
*The maxim is often attributed to Aristotle,*
*as a paraphrase of the Nicomachean Ethics 1096a11–15.*

**ஓம் ஷாந்தி ஓம், அன்பே சிவம்**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்**
Pax Ravichandra-11-10-2023

# கானல் நீரா மதம்?

---





ஓதும் மதங்களில்தான்-எத்தனை ஒவ்வாத பொய்கள்-வேதம்
ஓதிடும் மனதிலும் சாதிய வெறிகள், இறைமகனைப் போற்றும்
கிறிஸ்தவர் மனதிலும் நிறவெறிகள்.
வல்ல அல்லாவைத் தொழுதிடும் மனதிலும்
ஷியா- சுன்னி முழங்கிடும் ஓயாத போர்ப் பறைகள்

அழுகைச் சுவர் நோக்கி தொழும்
யூதர்களின் கண்களிலும் சோகக் கண்ணீர்
அல்அக்ஸா பள்ளிவாசலிலும்
அகதிகளான பாலஸ்தீனரின் செந்நீர்

சீவர ஆடையையும் சிவப்பாக்கிடும் இனவாத
இரத்தம், ஐவேளை தொழுகையிலும்
மதப்பயங்கரவாதிகளின் துப்பாக்கிச் சத்தம்

இடித்த இராமர் கோயிலிலும் பாபரின் வன்முறை
இடிபட்ட பாபர் மசூதியிலும்-தொடரும்
இந்துக்களின் வன்முறை




சிலுவைப்போர்களும், ஜிகாத்தும் -மத நீதியாக
சாதியம் மனுஸ்மிருதியாக, உண்மை, கருணை,
அன்பு, அகிம்சை கேள்வியானது-இன்று
மதப்பயங்கரவாதம் மாற்று வழியானது?



முடி சூடா மன்னர்களாய் மாறிய பாப்பரசர்களின்
அடக்குமுறை, பிளவு பட்ட கிறிஸ்தவமோ எத்தனை?
இயேசுவைப் பழிக்கும் கிறிஸ்தவர்களின் ஒற்றுமை-நிறவாதம்
மறையாத வெள்ளையர் மனமோ கருமை

இந்திய சுதந்திரம் நள்ளிரவில் கிடைத்திட, காரிருள்
கலைய முன் சிந்திய, இந்து, சீக்கிய, முஸ்லீம்களின் இரத்தம்.
இறைவனும் இனவாத அண்ணகனோ என்ற அச்சம்
வானைத் தொட்ட வன்முறையின் உச்சம்

இராட்டினத்தில் காந்தியம் பஞ்சாய் மாறிட
நூற்ற நூலோ தூக்கு கயிறாய் மாறிய துயரம்

கோட்ஸேக்கள் வாழும் உலகில், மகாத்மாவுக்கு
துப்பாக்கிச் சூடும். அன்னாஸ், கைபாஸ் வாழும் உலகில்
கிறிஸ்துவுக்கு சிலுவை மரணமும்
மாற்ற முடியாத வன்முறை விதிதானோ?

போதி மரமும் இனவாத தீயில் கருகிட நிழல் தேடும்
புத்தர் பெருமான், சிலுவை மரத்தை ஆலய கோபுரங்களில் ஏற்றிட,
ஆலயங்களைக் கண்டு அஞ்சி-ஏழைகளின்
இதயங்களில் புகலிடம் தேடும் இயேசு பெருமான்







கீதையிலும் வருணாச்சிரமம்,
கண்ணனும் "தலித்தான" அவமானம்
இராமானுஜரும், மகா கவி பாரதியும்-புரிந்த
புரட்சி, சாதியம் கடந்த மனித நேயம்

மதம் போதையும், அபினியும் தானோ?
கார்ல் மார்ஸ், லெனின் கூவியது சரிதானோ?
கடவுள் இறந்து விட்டார் -நீட்ஸே
கூறியது உண்மைதானோ?

அன்பே தெய்வம் என்றால் மதங்கள் எதற்கு?
சத்தியமே வேதம் என்றால் சாதியம் எதற்கு?
தன்னை அறிந்தவனுக்கு தெய்வம் எதற்கு?
அன்பு செய்யத் தெரிந்தவனுக்கு எதிரிகள் எதற்கு?





தள்ளாமையிலும், இருப்பதை தானம் செய்யும்
ஏழை, ஊனமுற்ற நிலையிலும் உழைத்து
இருப்பதை பகிரும் வண்மை
வள்ளல்களிடம் காணாத மேன்மை
அன்பிற்கு மதங்களில்லை சொல்லும் உண்மை

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகமும்***

*Pax Ravichandra-11-10-2023*

# காயம்

-----------------------------------

பட்ட மரம் தளைக்குமோ? சுட்ட மண் ஒட்டுமோ?
கபட வேடதாரிக்கும், பொய்யனுக்கும் புகழ் வருமோ?
வாடியமலரை வண்டு நாடுமோ?
பாசனமில்லாப் பயிர் தழைக்குமோ?
ஈசன் இல்லா நெஞ்சில் அமைதி நிலவுமோ?
நெஞ்சே நேசரை நித்தம் தேடு

காவலன் இல்லாத கோட்டை நம் கூடு
கடவுள் தந்த உயிரோ இதில் ஈடு
காலன் வருகிறான் காயமே கோட்டையை மூடு
உயிர்போனபின் காயமே காடுதான் உன் வீடு

பாடையில் போகுமுன் ஆடைகட்டி
ஆயிரம் வேஷமிட்டு மேடையில் ஆடுதடி காயம்-
ஆவி பிரிந்தபின் நாற்றமெடுத்து அழுகுதடி ஊனம்
வீட்டினிலோ சொந்தங்கள் பற்றறுக்க
காட்டினிலோ தேகம் தீக்குளிக்க
கங்கையும் போக்குமோ பாவத்தை?
காசியும் தீர்க்குமோ செய்த கர்மத்தை?

பொன்னும் பொய், மண்ணும் பொய்
உன் உயிர் நானெனும்-காதல் உறவும் பொய்-
உலகில் நான் பொய், நீ பொய்
எனது, உனது என்னும் உறவும் பொய்
எல்லாமே பொய்யென அறிந்தபின்
இறைவன் திருவடி சரணடைவாய் நெஞ்சே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-12-04-2023

# பிறப்பும், இறப்பும்

---

யுத்தம், கொரோனா எண்ணற்ற உயிர்களைப் பலி கொள்ள
எத்தனை ஜெபங்கள்-வேண்டுதல்கள், இடைவிடாத பிராத்தனைகள்.
அச்சத்தில் பிறப்பது செபமல்ல, இரத்தலும் ஜெபமல்ல-இறையன்பின்
ஆழ்ந்த வெளிப்பாடே ஜெபம், இதயத்தின் இன்னிசையே-ஜெபம்

இறப்பு நம் கையில் இல்லை
இருப்பதும் போவதும் இறைவன் வகுத்த நிலை
பிறப்பு. இறப்பு எனும் இரு கரை நடுவே
வாழ்வு எனும் நதி பாய்கின்றது.

முடிசார்ந்த மன்னனும்-வறுமைப் பிடியில் வாழும்
ஏழையும் முடிவில் பிடி சாம்பலாக-மாறாத விதியாய்
மரணம், மணிமகுடத்தின் வடிவாய் கோவிட் 19

நம் உள்ளே நாம் தொலைத்ததை. நாம் வெளியே தேடுகின்றோம்
தொலைத்த இடம் விட்டு தொலைவில் தேடுவது ஜெபமா?
சுழலும் தர்மசக்கரம் ஓயாது சுழன்றிட, வினை விதைத்தவன
வினையறுத்திட உண்மையைத் தேடாத-ஒப்பாரியாய் ஜெபம்?

கிணற்றில் நீர் நிறைந்தே உள்ளது, நம் வாளியில்
ஆயிரம் துளைகள், இறைக்கும் போது வெற்று வாளி
நம் குற்றமா? இறை குற்றமா?

நம்மை நாம் அறிதலே, நம் உள்முக யாத்திரையே ஜெபம்
மனம் திரும்புங்கள், உனக்கு நீயே ஒளி-உனக்கு நீயே அரண்
விழிப்புணர்வே வெளிச்சம், வாழ்வு பிச்சையல்ல, பெருங்கொடை

அச்சத்தின் அழுகுரல் ஜெபமல்ல, ஆனந்த கண்ணீர்தான் ஜெபம்
தன்னுள் உறைபவனை காணாமல், தேடி வாழாமல்-ஆயுள் நாடி
அச்சத்தில் சரணடைபவன் அடைவது எது?

மெய்சிலிர்க்க மேனி நடுங்க, பக்திப் பரவசத்தில்
கண்ணீர் பெருக உள்ளே உறைபவனை-
நம் பெருமானை உணர்ந்து போற்றுவது-ஜெபம்.

மனிதன் உலகமெல்லாம் ஆதாயமாக்கி கொண்டாலும்
தன்னை இழந்தால் கிடைப்பது எது?, ஆயுளின் ஒரு வினாடியை கூட்ட
மகா அலெக்ஸாண்டராலும் முடியாது, மரணப்படுக்கையில்
மன்னன் அறிந்த மாபெரும் உண்மை?

Believe nothing, no matter where you read it, or who said it, no matter if I have said it, unless it agrees with your own reason and your own common sense-

*Buddha*

வாழ்வும், சாவும் நம் முன்னே, தெரிதல் நமதே
இன்றில்லையேல் நாளை மரணம்
நன்றாய் வாழ்ந்தால்-நமக்கேது மரணம்.

வாழ்வு வருடங்களின் தொகை அல்ல, நேற்று, நாளை
என்று ஏதுமில்லை, இருப்பது இக்கணமே-நிகழ்காலமே
ஏனையவை மனதின் மாயத் தோற்றங்களே

கதிர்கள் மொட்டுக்களை சுடுவதில்லை
மலர்தலுக்கு தூண்டுகின்றன
சிற்பியின் உளி கல்லைச் சேதப்படுத்துவதில்லை
சிறைப்பட்ட சிற்பம் விடுதலை பெற அருள்கின்றது

மரணம் மகத்தான விடுதலை
உன்னுள் இருப்பது வெளியிலும் உள்ளது
அறிந்தால் ஆனந்தம்.

எது நடந்ததோ அது நன்றாகவே நடக்கின்றது-
எது நடக்கின்றதோ அதுவும் நன்றாகவே நடக்கும்
பக்தனின் திட நம்பிக்கை, பரிபூரண சரணாகதியே ஜெபம்
அன்பின் ஆனந்த வெளிப்பாடே-ஜெபம்

என்தேவனே! என் தேவனே ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்
இயலாமையின் உச்சத்தில் பக்தனின் குரல்
புரிதலில் மலர்ந்த பரிபூரண சரணாகதியில்
மொழி கடந்த மௌனத்தின் இன்னிசை

வாழ்வே நாம், வாழ்விற்கு சாவு தெரியாது.
வானில் திசைகளில்லை-மனம் படைக்கின்றது
கடந்து போவோம்-கடவுளாவோம்
அன்பினால் நிரம்புவதே உண்மையான ஜெபம்

வீணை நான் -மீட்டும் கலைஞன் அவன்
நாதமும், -ஏழு ஸ்வரமும் அவனே
வெற்றுப் புல்லாங்குழல் நான், வேணுகானம் அவன்

சும்மாயிருத்தலே-மனத்தில் ஓய்ந்திருத்தலே ஜெபம்
மற்றவை வெற்று வார்த்தைகளே

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
*PaPax Ravichandra-7-08-2023*

# வீடு-காக்கை கூடு

வண்ணப் பட்டங்களாய் வானில் மேகங்கள் ஆடி அசைந்திட
சாம்பல் பூத்தவானம் மாலை வந்ததென்று சோம்பல் முறித்திட
ஆற்றில் நீராடி-கரையில் உடல் துவட்டிய காற்று
ஆனந்தப் பள்ளுப் பாடியது என்னே இந்தச் சுகம் என்று

துள்ளிக் குதித்த மீன்களோடு கரைதொட்டுப் பார்த்து
குதூகலத்தில் கை கொட்டும் அலைகள்
ஒன்றாய் இரண்டாய் பலவாய் சிலவாய்
கூடு நாடி வீடு திரும்பும் காக்கைகள்

விடியலில் கூட்டை விட்டு-இரைதேடி
ஆற்றைக் கடந்தவை-வீடு திரும்பிக்கொண்டிருந்தன
நீண்ட ஆற்றை மெல்லப் பறந்து கடக்கும்
நெஞ்சங்களில், வீடு சேரும் ஆனந்தம்

நீண்ட தூரம் சென்றும் இரை கண்ட இடத்தில்
இடம் பிடியாமல் –மாலையில் வீடு திரும்பிடும் பறவைகள்
உரிமை கொண்டாட வீடும்-உறவு கொண்டாட
சொந்தங்களும் நிறைந்த அழகிய வாழ்வோ ஆனந்தம்

ஆற்றோரம் காற்றாடும் ஆலமரம் காக்கைளின் வீடாக
காற்றாடும் கிளைகளெல்லாம்.“வாவா”என்றழைத்தே கூத்தாட
வீடு வந்தவை கிளையமர்ந்து “சொந்தங்களோடு கதைபேச”
கரைதலும் களித்தலுமாய் குதூகலம் பூத்தாட
கதைகேட்ட ஆலும் களிப்புற்று பூத்த ஆனந்தம்

பொழுது சாய்ந்திட தென்றல் சாமரம் வீசிட
காற்றசையும் கிளைகள் காக்கைகளுக்குத் தொட்டிலாக
ஆற்றோர ஆலும் அன்னை மடியானது
ஆனந்தம் விளையாடும் வீடானது

கூடில்லாப் பறவை நான்-இறைவா
என் அம்மையப்பனும் ஆனந்த வீடுமானவனே
என் நேரம் வந்ததும் உன் வீடு வர
எனக்கருள்வாய்-ஐயா மனம் ஜெபித்தது

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-08-04-2023*

# குருவும் சீடர்களும்

---



ஆழமற்ற அலை கடலில் அலைக்கழியும் மீனவனை
ஆழ்கடலில் மீன் பிடிக்க அழைத்தார்
படகும், வலையும் அநாதையாக- பற்றறுத்து
வாழ்வளிக்கும் வார்த்தையை சீமோன் பின் தொடர்ந்தார்

வரி தண்டிய லேவியரையும்-வந்து என்னைப் பின் செல்
வார்த்தையை பெருநிதியாய் கண்ட-மத்தேயு
வாழ்விலும் புத்தெழுச்சி



ஐந்து அப்பங்களையும் இரு மீன்களையும்
ஐயாயிரம் பேர் உண்டு பசியாறக் கண்டும்
அப்பத்திற்காய் அங்கலாய்த்த சீடர்
அற்புதனே தம்மோடிருந்ததை அறியாத மூடர்

மறுரூபமாகி தம் மகத்துவத்தைக் காட்டி-மனுமகன்
மோஸே-எலியாவோடு உரையாடி மகிழ
வானகத் தந்தை மகிழ்ந்து வாழ்த்திட
மூன்று கூடாரம் அமைக்க முன்மொழிந்த சீடன்
முதல்வனின் பரிபூரணத்தை காணாத குருடன்

கழுமரத்தில் இறைமகனாய் கண்டதோ அதிசயம்
கள்வரும் மடியும் வேளையில் இறையரசை வரமாக்கி
இன்பம் கண்டதோ பேரதிசயம்

ஆடையின் விளிம்பைத் தொட்டு அணங்கு நலம்பெற
என்னைத் தொட்டது யார் ? அநாதரட்சகன் கேள்விக்கு
முட்டி மோதும் கூட்டத்தை சுட்டிக் காட்டிய மனிதன்
கூட நடந்தும்-இயேசுவைத் தொடாத-சீமோனோ
கூட்டத்தில் ஒருவன்

விழித்திருந்த செபிக்க விடுத்த அழைப்பை
தூங்கி கழித்தார், “விழிப்புணர்வே ஆன்மீகம்”
என்பதை அறிய மறந்தார்.

ஆசை வலையில் வீழ்ந்தவர் காட்டிக்கொடுத்தார்
உயிருக்கஞ்சியவரோ மறுதலித்தார்-குருவை
கை விட்டு எஞ்சியவரோ தப்பி ஓடி ஒளிந்தார்

விலைமாதும் விலையற்ற தன் அன்பைச் சொல்ல,
நறுமண தைலத்திற்கு விலை மதிப்பிட்டார்
விற்று ஏழைகளுக்கு கொடுத்தல் தர்மம் என்றே
விலையில்லா அன்பை குறைத்து எடை போட்டார்

யார் பெரியவன் நாளும் சர்ச்சையானது
இறையரசில்- இயேசுவின்
இடம், வலம் இருக்கை போட்டியானது

வாழும்போது அவரை புரியத் தவறியவர்கள்
புண்பட்டு, பண்பட்டே-பின்நாளில் தம் வாழ்வை-
இறைமகன் இயேசுவுக்காய் ஈந்து மகிழ்ந்த
அற்புத மனிதர்கள்

கரியும் வைரமாகக் காலங்கள் செல்லும்
மனிதனும் தெய்வமாக இறை அருளே போதும்.
***பூரண சரணாகதியே யாகம்***
***ஆணவத்தை ஆகுதியாக்கியவருக்கே இது யோகம்***

***கூழாங்கற்களை வைரமாகியவரோ இறைபித்தர்-ஞான சித்தர்***

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra- 12-10-2023



# மண் குடிசை

---

என்னே இந்த அதிசயம்? எப்படி இந்த மாபுனிதம்
ஏழையின் குடிசையில் வாழந்திட
வானின்று வந்தது?

உயிர்க் காற்றோ-ஒவ்வொரு நொடியும்
விருந்தாளியாய் வந்துபோயிட-வர மறுக்கும் நொடியில்
மரணம் நிச்சயம் என்றாகிட, துடிக்கும் இதயம்
துடிக்க மறந்தால் மரணம் நிரந்தரம் என்றானது

மூப்பும், பிணியும், சாக்காடும்
கறையானாய் அரிக்கும் மண் குடிசையில்
மா புனிதம்  வாழ வந்தஅதிசயம்தான் என்னே!

ஆணவம், கன்மம், மாயை மும்மலங்களும்
வாழும் குடிசையில் அகங்கார இருள் ஆட்சி செலுத்திட
ஒடுங்கி , ஒளி தன்னை மறைத்த மாபுனித ஆத்மா.

கடந்தும் உள்ளேயும்
கடவுளாய் நின்ற ஒளி காணாமல்
இருண்ட கானகமாய் மனம்.

கட உள்ளே என்று உள்ளிருந்து ஒலி கேட்க
“நான்” கடந்து போனேன்-நானும் நீயாக
என்னே பேரானந்தம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-05-05-23

# மண் குடிசை

---





ஐந்தூர் கேட்டான்- ஆணவம் மறுத்திட
ஐந்து மனை கேட்டான் -இல்லையென்று
இறுமாப்பாய் இளங்கோ மொழிந்திட
குருஷேத்திரத்தில்
குருதியினால் எழுதிக் கொடுத்தான்
நிலமாளும் உரிமையை நீதியாய்க் கண்ணன்

மண் ஆண்ட பாண்டவரும் மாண்டிட
மனம் ஆளும் அவதார புருஷனும் மறைந்திட
எல்லாம் மாறிடும் உலகில்
மண்ணரசுக்காய் நிகழ்ந்த குருஷேத்திர யுத்தம்
கடமை மூலம் கடவுள் கீதா உபதேசம்?

தன்னை வதைப்போரையும் மன்னித்து
எதிரிக்கும் அன்பு -கழுமரத்தில்
கருணையின் ஞான உபதேசம்
விண்ணரசுக்காய் சிந்தியதோ தம் இரத்தம்

வளம் கொழிக்கும் நாடாள
நிலம் தேடும் மனிதன் ஆபிரகாமை
அழைத்த இறைவன்




ஆபிரகாம் சந்ததி எகிப்தில் அடிமைகளாக
மோசே வழியாய்-எகிப்தியரை வதைத்து
இஸ்ராயேலரை ஆண்டு வழி நடத்திய இறைவன்
வாக்களிக்கப்பட்ட பூமியில் -புது
வாழ்வு கொடுத்த மதத் தலைவன்

வல்லரசுகளுக்குப் பன்முறை அடிமையாகி-
உலகெங்கும் சிதறிய இனம்-மீண்டும் குடிவந்தும்
வாக்களிக்கப்பட்ட பூமியை
முற்றாய் சுவீகரிக்காத இஸ்ராயேல் இனம்

இறையீந்த வேதம் இஸ்ராயேல் வசமானது
இறையினம் நாமே மாறாத தலைக்கனமானது
பாலும் தேனும் ஓடும் பூமி குருஷேத்திரமானது
குருதியும், கண்ணீரும் நாளாந்த நிகழ்வானது

நிலை வாழ்விற்கு நிலக்கிழாரும் வழி கேட்க
நிலையானது ஏதுமில்லை-நின் நிலபுலங்களை விற்று
ஏழையருக்கு கொடுத்து, எனைப் பின் செல்,
அழைப்பைப் புறந்தள்ளியவர் அடைந்தது ஏதுமில்லை

உம் இராஜ்சியத்தில் வரும்போது-என்னை
நினைந்தருளும் -வரம் கேட்ட கள்வனுக்கு
நிலை வாழ்வு வரமானது



முடி சார்ந்த மன்னரும் பிடி சாம்பலாக
விண்ணரசில் வாழக் கள்வனுக்கும்
இறைமகன் ஈந்த வரம்தான் என்னே?
கள்வனும் புரிந்த தவம்தான் என்ன?

இறையரசு நம்முள்ளே -இறை மக்களே
நம் தேடல் பரம்பொருளே, அறிந்த- மோசேயும் தம்முள்ளே
இறையரசை கண்டார்-அகம் மகிழ
ஆண்டவனைப் போற்றிப் புகழ்ந்தார்.

***வாக்களிக்கப்பட்ட பூமி இறையரசே***
***புரிந்தவர் அடைந்தார் புண்ணியனைப் போற்றினார்***
***நடைப் பிணங்களோ -இன்றும் நிலம் தேடி அலைகின்றார்***
***நிலக்கிழாராய் வாழ்வைத் தொலைக்கின்றார்***

நம் சொத்தென இருப்பது நம் சுயமே
மற்றெல்லாம் மாறுபடும் நிழலே
மாயை மாயை எல்லாம் மாயை என்ற ஞானியும்
தன்னை இழந்தது சோகமே, பெண் மோகமே

மண் குடிசையில் நாம் வாழ்வு
மூப்பு, பிணி. சாவோ நாளும் நிகழ்வு
விழித்த சித்தார்த்த மனம் தேடியது
விழிப்புணர்வில் ததாதகராய் ஒளிர்ந்தது

**இறைவனே நம் தந்தை**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
*Pax Ravichandra -12-10-2023*

# மறு பிறவி

---

சேதனக் கழிவுகளைத் தன்மயமாக்கித் பூமி தன்னைப் புதுப்பித்திட
மீள் சுழற்சி முறையால் உக்காத கழிவுகளை மாற்றி
மனிதனும் மாசடையும் பூமியைக் காத்திட
வாழும் பூமியை நரகாக்கிய அரக்கன்-மனந்திரும்பி
பூமித் தாயைக் காத்திட முயலும் புனிதன்

மறுபிறவியால் பாவ ஆன்மாக்கள்
மோட்சம் பெற மதங்கள் அருள் புரிந்திட
அவியாத நெருப்பெரியும் நரகில் -பாவிகளை
வதைக்கும் கொடிய அரக்கனாய்
யூத-கிறிஸ்தவ-இஸ்லாமிய இறைவன்

அவியாத் தீ எரியும் நரகு, அன்பே சிவத்தைப் பழித்து
மனித உரிமைக்கும், மானுட நீதிக்கும் சவாலானதே-அன்பு
இறைவனை அரக்கனாய்ச் சித்தரிக்கும் இழி நிலையானதே

இறைகுலம் நாமே எனும் யூதர்களே!
இரட்சிப்பு எமக்கே என்னும் கிறிஸ்தவர்களே!
ஜவேளை அல்லாவை தொழும் முஸ்லீம்களே!
சொல்லுங்கள் உங்கள் இறைவனிடம் -
மனம் திரும்பிட மறுபிறவி எனும் மீள்சுழற்சி பற்றி
மானுடத்தை இரட்சிக்கும் -அஹிம்சை முறை பற்றி.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-05-05-23*

# மதம் கடந்த ஆன்மீகம்






ஆன்மீகம் தன்னை அறியும் ஒரு
தனி மனிதத் தேடல்-தேடல் ஓய்ந்து
மனம் சும்மா இருக்கையில்-மெய்யறிவாய்த்
தன்னுள் பூக்கும் ஆனந்த விழிப்புணர்வு

திருச்சட்டம், சடங்கு, பலி,
சம்பிரதாயம், மதக் கோட்பாடு, வேதம்
சார்ந்த நம்பிக்கையாய் மதம்







உலகில் மதங்களோ பல்லாயிரம்
மதம் கடந்த ஆன்மீக உணர்வோ ஒன்று
தூங்குபவருக்கு மதம்
உள்ளுணர்வின் குரலை அறிந்து
விழிப்புணர்வில் நிலைத்தவருக்கே ஆன்மீகம்

நம்பிக்கை சார்ந்த கோட்பாடு மதம்
நம்பிக்கை கடந்து, அனைத்தையும் ஆய்ந்தறியும்
உண்மையின் நிலைப்பாடு ஆன்மீகம்




தண்டனைத் தீர்ப்பு, வெகுமதி என
சொர்கம், நரகம் மதம் தரும் பரிசு
இருமை கடந்த உள அமைதியே ஆன்மீகம்

பாவம், குற்றவுணர்வு பற்றிப் பேசுவது மதம்-
தவறிலிருந்து கற்றுக்கொள்வதே ஆன்மீகம்




நம்பிக்கையால் அடக்கி ஆள்வதே மதம்
நம்பிக்கை கடந்த சத்திய தரிசனமே ஆன்மிகம்




அறியாத கடவுளைப்பற்றி பேசுவது மதம்
வாழ்ந்தறியும் சத்தியமாய், இருப்பாய்
இறைவன்-அதுவே ஆன்மீகம்




கண்டுபிடிப்பது மதம்- கண்டடைவது ஆன்மீகம்
மதம் சந்தேகத்தை அனுமதியாது,
ஆன்மீகம் நம்பிக்கை கடந்த சத்திய யாத்திரை

மதமோ நிறுவனம் -ஆன்மீகமோ தெய்வீகம்
பலி, சட்டம் கடந்த அன்பின் மொழி

மானுடத்தை பிரிப்பது மதம்
மதம் கடந்து மானுடத்தை இணைப்பது ஆன்மீகம்
நம்பச் சொல்வது மதம்-நம்பிக்கை கடந்து
வாழ்ந்தறியும் உண்மை ஆன்மீகம்







தத்தம் வேதக் கோட்பாடுகளைப் அனுசரிப்பது மதம்
மதம் கடந்து தன்னைத் தான் அறிவது ஆன்மீகம்






அச்சத்தில் நிற்பது மதம்-அன்பில் நிலைத்து
ஆழ்ந்த விசுவாசம், நம்பிக்கையில்
வளர்வது ஆன்மீகம்

மதம் எண்ணங்களில் வாழ்கிறது
ஆன்மீகம் உள்ளுணர்வில் வாழ்கிறது

பலி, சடங்காய் மதம், தன் சுயத்தை
அறியும் மெய்யறிவே ஆன்மீகம்
கட உள்-கடவள் நீ என்பது ஆன்மீகம்
ஆணவத்தை வளர்ப்பது மதம்
ஆணவம் கழிந்த தூய மனமே ஆன்மீகம்







உலகை துறந்து இறைவனை தேடு
மதக் கோட்பாடு- வாழ்வே இறைவன்
வாழ்ந்தறியும் உண்மையே வழிபாடு-
துறத்தலைத் தவிர்த்து-இருப்போடு
இசைந்தாடும் விழிப்புணர்வே ஆன்மீகம்




சந்தேகங்களுக்கு இடமில்லை-நம்பு, விசுவசி என்கிறது மதம்
அனைத்தையும் ஆய்ந்தறிந்து பார்த்த அனுபூதியில் அறிவாய்
பிரக்ஞானம் பிரம்மம் என்பது ஆன்மீகம்.
விழிப்புணர்வில் நிலைத்த அகத் தியானம் ஆன்மீகம்







இறந்த பின் சொர்கத்தின் கனவுகளால் நிரப்புவது மதம்-
அஹம் பிரம்ம அஸ்மி- அது நீயே
வாழ்வே மோட்சம்- வாழ்வே இறைவன்
இறைவனாக வாழ் அதுவே ஆன்மீகம்

இறந்தகாலத்திலும், எதிர்காலத்திலும் வாழ்வது மதம்
காலம் கழிந்த நிகழ்காலத்தில் வாழ்வது ஆன்மீகம்
உள்ளுணர்வின பிரிவினை வாதம் மதம்
உள்ளுணர்வின் உன்னத பரிணாமமாய் ஆன்மீகம்







சொர்க்கம், நரகமாய் மதம்
எளிய மனத்தவருக்கே நிலை வாழ்வு
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம் -ஆன்மீகம்

மரணத்திற்கு அப்பால் நிலை வாழ்வு மதக் கோட்பாடு
வாழ்ந்தறியம் சத்தியம் இறைதன்மை
இங்கே, இப்போது அறியலாம்- நீயும் அதுவே




இறை மக்கள் நீங்கள், இறையரசு உங்களுக்குள்ளே
மனிதனாய் உங்கள் சத்திய யாத்திரை

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-உலகில்
தூய மனத்தவருக்கே அமைதி
தூய மனமே இறை சந்நிதி- அதுவே ஏதேன் வனம்




உன்னையே நீ அறிவாய்-உனக்கே நீ ஒளியாகிப் போ
உங்கள் ஒளி ஒளிர்வதாக
உண்மை உங்களுக்கு விடுதலை அளிக்கும்




உள்ளுணர்வின் உன்னத பரிணாமம் ஆன்மீகம்
ஆன்மாவின் சங்கீதம் ஆன்மீகம்
நம்பிக்கையின் வரட்டுத் தத்துவம் மதம்

எதிரியிலும் இறைவனைக் காண்பது ஆன்மீகம்
எல்லாம் நின் செயல்-நாம. ரூபம் கடந்த
சத்தியம், சிவம். சுந்தரம் ஆன்மீகம்







சச்சிதானந்தமே நம் மெய்யிருப்பு
தரகர்களான குரு, பூசாரி கடந்து
தந்தையும், மகனும் உறவாடும்
ஆனந்த உறவு ஆன்மீகம்-

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-10-2023*

# மதவாத யானைகள்

---

நெய்விளக்கேற்றி-கற்பூரதீபம் காட்டிப்
புரியும் தீப ஆராதனையால்
இருண்ட இதயங்கள் ஒளி பெறவில்லை

வண்ண மலர்கள் தூவி வழிபடும் புஷ்பாஞ்சலியால்
மொக்கான இதயங்கள் மலரவில்லை
சாம்பிராணி எரித்து, ஊதுபத்தி ஏற்றி
புரியும் தூப ஆராதனையால்-இதயங்கள்
பக்தி மணம் பெறவில்லை

ஓதும் மந்திரமும், உரக்க கூறும் செபமாலைகளும்,
வாங்கொலியும், பிரித்தொலியும்
சூழலை மாசாக்கி, காதுகளைப் புண்ணாகி
காற்றில் கலக்கும் வெற்றுச் சத்தங்களானது

ஐவேளைத் தொழுகைகளும், பூஜைகளும்,
ஆணவ மனம் போடும் தோப்புக்கரணங்களும்,
அங்கப்பிரதட்சணமும், மன்னிக்கத் தெரியாத மனம் புரியும்
பாவசங்கீர்தனமும் -வெற்றுச்சடங்கானது

மழித்தசிரசும், சீவர ஆடையும், காவியும், திருநீறும்,
உருத்திராட்சமும், சிலுவைகளும், செபமாலைகளும்
தாடியும், தொப்பியும் மதவேஷங்களான காலத்தில்
சாமிகளாய்ப்-பாதிரிகளாய்ப் பிக்குகளாய்-மௌலவிகளாய்
மாறிய ஆன்மீகக்குருடர்கள்-பாகன்களாய்
மதம்பிடித்த "மத"-யானைகளை வழிநடத்திட
"விழிப்புணர்வின்றி"
பின்தொடரும் குருட்டுப் பக்தர் கூட்டம்.

***மதம் கடந்த ஆன்மீக தரிசனம்-அனுபூதியில்***
***அறியப்படாத அவலம்?***
அன்பே சிவம், வாழ்வே தவம் வாழப்படாத துயரம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-17-04-2023*

# மெஸாயா-மீட்பர்

---

வாழ்வளிக்கும் மெஸாயாவை கொன்றுவிட்டு
உலகாளும் மெஸாயா ஒரு நாள் வருவார் என,
நம்பிக்கையோடு நாளும் எதிர்பார்த்திருக்கும்
விழிப்புணர்வற்ற யூத இனம்?



இயேசு மெஸாயா என அறிக்கையிட்டு
பவுலின் பாதையில் பயணித்து
அன்னாஸ், கைபாஸாய் உருமாறி
அரியணை அமர்ந்த கிறிஸ்தவம்



கோஷமிட்டுக் கூவியழைத்தும் இயேசு வரவில்லை
ஆண்டுகள் இரண்டாயிரம் கழிந்தும் பவுலின் இறைவாக்கு
மெய்க்கவில்லை, காய்க்காத அத்தி மரமாய் கிறிஸ்தவர்கள்
மதமோ சாரமற்ற உப்புக்கல்

ஆலயக் கோபுரங்களில் இன்றும்-இயேசுவை
அறைந்து கொல்லக் காத்திருக்கும்
அச்சமூட்டும் வெற்றுச் சிலுவைகள்?

வானில் சிலுவைக் குறியிட்டுப் பறக்கும்
வண்ணப் புள்ளினங்களுக்கு வேதங்களில்லை
மழை பொழிய உயிர்த்தெழும்
புல், பூண்டுகளுக்கு மதங்களில்லை

விடியல் கண்டு கூவும் சேவலும்-வண்ண
இதழ் விரித்துச் சிரிக்கும் மலர்களுக்கும்
மதங்கள் இல்லை, ஆலயம் தேவையில்லை

வாழ்வை வழிபாடாக்கி -புள்ளினங்களும், பூவினங்களும
குதுாகலிக்க-வாழும் உலகை எரி நரகாக்கி
நடைப்பிணமாய்ச் சாகும் மானிடம்
மதமோ காய்க்காத அத்திமரம்

***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra -12-10-2023

# நான் எனும் பொய்

---

தந்தையும், தாயும் சேர்ந்து
விந்தையாய் கட்டிய மண் குடிசையிது!
சுத்த சைதன்யம் குடியிருக்கும் கோயிலிது-

வேண்டாத விருந்தாளியாய் ஆணவம் குடி வந்திட
உள்ளும் வெளியும் என் உலகெங்கும் கலையாத இருள்
என் மனவானில் மறைந்து தோன்றும்
தேய்ந்து வளரும் மதியாய் நிம்மதி

வருணனோ வற்றாத குருதிக் கங்கையாய்
என்னைச் செழிக்க வைக்க-வாயுவோ
தென்றலாய்த் தாலாட்டி சுவாசமாய் வந்து போயிட
அக்கினியோ அணையாத் தீயாய்
யாககுண்டத்தில் எரிந்திட
அவிப்பலியாய் ஆசைகள், பூசைகள்

மண் குடிசையில்
சுடரேற்றிடத் தவிக்கும் தந்தையாய்
சுத்த சைதன்யம்

இருமை தரும் அறிவை ஒதுக்கி
உள்ளே என் புனிதயாத்திரை
இருளில் மூழ்கிய என் குடிசையிலோ
விடியலின் ஒளிக்கீற்று

கடந்து உள்ளே போனேன்
***கட உள் ஆகி -கடவுள் ஆனேன்***
ஆணவ இருள் கலைந்திட
சுத்த சைதனயமாய் என் இருப்பு
சூனியத்தில் என் குடியிருப்பு
சத், சித், ஆனந்தமாய் என் குதூகலிப்பு!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-05-05-23*

# நத்தார்-மரம்

---

இயேசுவின் பிறப்பு-வெற்று ஆடம்பர விழாவல்ல
ஆரவாரப் பிறந்தநாள் கொண்டாட்டமுமல்ல
நம்முள் இயேசு பிறந்திட, இயேசு உணர்வில்-புதிதாய்
நாம் மலர்ந்திட இறை விடுக்கும் அழைப்பே
சத்தியத்திற்கு சான்று பகிரும் சவாலே-நத்தார்

பைன் மரம் -கடும் குளிரைத் தாங்கி
துன்பக் காற்றில் ஆடி விழுந்து விடாது நிற்கின்றது-
வாழ்வில் துன்பச் சுமைகளைத் தாங்கிடும்
பைன் மரம் நாமே

மானுடரை ஒன்றுசேர அழைக்கும் மணியோசை
ஒற்றுமைக்காய் குரல் கொடுக்கின்றது.
மணியும் நாமே நல்நாதமும் நாமே
-
ஏற்றிய தீபங்கள்-இருளைப் போக்கி
இரக்கம், பொறுமை, மகிழ்ச்சி, தாரள உள்ளம் என
வாழ்க்கைப் பாதையில் ஒளியேற்றி அனைவரும்
மகிழ்ந்து பயணிக்க வழி சமைக்கின்றது.
ஒளிரும் தீபம் நாமே.

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்-
உலகில் நல் மனத்தவருக்கு அமைதியும் உண்டாகுக
இறை புகழ் பாடி அமைதிக்கு குரல் கொடுக்கும்
வானதூதரும் நாமே
அமைதி, நீதி, அன்பு நம் வாழ்வாகட்டும்.
நல்மனத்தோராய் வாழ்வு சிறக்கட்டும்

மனுமகன் இருப்பிடத்திற்கு வழி காட்டும் விண்மீனும் நாமே
இறைவனைப் பிறர் நம்மில் காண
சத்திய யாத்திரையான வாழ்வு எமதே.

ஞானிகளும் நாமே-நம்மிடம் உள்ள மேலானதை
இறைவனுக்களித்து மகிழ்வோம்.
இருப்பதை இல்லாதவரோடு பகிர்ந்து
ஏழையரை மகிழ்விப்போம்.

மன்னிப்பை வழங்கி-சமாதானத்தை நிலைநாட்டி
துன்பத்தைப் பொறுத்து அனைவரையும் வாழவைப்போம்.

நத்தார் உணவும் நாமே
அன்பை பகிர்ந்து-தனிமையில்
வாழ்வோர் அன்புப் பசி தணிப்போம்.

நத்தார் இரவும் நாமே
ஆணவமழிந்து தாழ்சியுள்ளோராய்
தூய மனத்தோராய் வாழ்வோம்

இயேசு உணர்வு நம்முள் மலர்ந்திட
குழந்தை இயேசுவாய் நாம் பிறப்பதே
நம்மில் இறையாட்சி மலர்வதே
மெய்யான நத்தார்.

ஏனையவை வெற்றுக் கொண்டாட்டமே.
புத்தாடை அணிந்து, பரிசு வழங்கி, பட்டாசு வெடிக்க
கொண்டாடும் வருடாந்தக் களியாட்டமே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-12-10-2023

# நதி செல்லும் பாதை

---

கொஞ்சி மகிழ்ந்திட அன்னை என்னைப் பெற்றாள்
அஞ்சி நடுங்கிட, அவியா நெருப்பெரியும் நரகை
நீயா படைத்தாய் என் இறைவா?

மாறும் கற்பனை வடிவங்களுக்கு-
மதங்கள் உனக்குச் சிலையெடுத்து களிக்க
உருவில்லை உனக்கென்றே உரக்கக் குரல் கொடுத்து
வேறுசில பழிக்க எனக்கோ வேடிக்கை?

கற்சிலைகள் தொழுதும் ஹச், காசி, இராமேஸ்வரம் என
யாத்திரைகள் செய்தும் உன்னைக் காணவில்லை
ஒருவனா?, சக்தி சிவமென இருவனா?
திரிதத்துவமென மூவனா நீ ? என்ற
உண்மை இன்றும் யாருக்கும் புரியவில்லை.

கங்கா ஸ்நானமும் நீக்குமோ பாவம்?
ஞானஸ்நானமும் போக்குமோ பாவம்?
புண்ணிய நதிகளில் நீரைத் தவிர வேறொன்றுமில்லை
மாசடையும் கங்கையும்- பாவம்
போக்குமென்பதில் எந்த உண்மையுமில்லை.

சாதிய மதங்கள் மானுடத்தை வாட்டிட-சமயச் சண்டைகள்
வரலாற்றை மாற்றிட அவியா நரகநெருப்பில்
வாட்டும் கொடிய அரக்கனா இறைவன்

உனக்குள்ளே இறைவன் நீயும் அதுவே-அதுவும் நீயே
எனச்சொல்லும் மதங்களில்-மதம் கடந்த
ஆன்மீக புருஷராய் கபீர், ரூமி, கலில் ஜிப்ரன்
உனக்கு நீயே ஒளியாகிப் போ எனும் பெருமான் புத்தர்

யுத்தம், மதப்போர் பஞ்சம், கொரோனா
நிலநடுக்கம், சுனாமி, புயல், வெள்ளம் அச்சுறுத்த
ஏனிந்த வாழ்வு என்ற விரக்தி
எங்கே இறைவன் என்ற பகுத்தறிவின் குயுக்தி

மூப்பும், பிணியும், சாக்காடும் அச்சம் சொல்லிட
உன்னை அறியாத அவலம் நெஞ்சை வாட்டிட
தேடலைக் கைவிட்டு –போதிமர நிழலில்
சும்மா அமர்ந்திருக்கப் புத்தனானேன்

காவிகளில் ஆயிரம் போலிகள்- தொங்கிடும் சிலுவையில்
மதவாத நஞ்சுகள்- மதத்திலும் கறுப்புச் சந்தைகள்
மதவாத, இனவாதப் போதை வஸ்துக்கள்.

ஈரமில்லாத இதயங்களால் உன்னைத் தொழுதும்
இறைவா என் இறைவா என அழைத்தும் என்ன பயன்?
முப்புரிநூலும், நீறும், நாமமும் தரித்த நெற்றிகள்
சிலுவையும், உருத்திராட்ச மாலைகளும் அணிந்த
வணங்காக் கழுத்துக்கள்

உச்சியிலே தொப்பி, சிரைக்காத தாடி
கையிலே செபமாலை –ஐவேளை தொழுகை
மனமோ கல்லான பாறை -தீராத மதம் பிடிக்த யானை

சிலுவை அணிந்து, விவிலியம் படித்து நோய் தீரச் செபித்து
மதமாற்றம் செய்வதும் ஏனோ?-மனம்மாறித்
தன் நிலை உணர்ந்திட குணமாதல் எப்போதோ?

பட்டாடை அணிந்த செல்வனும் பகட்டாய் விழாக் கொண்டாடிப்
பக்தனாயப் உன்னிடம் பிச்சை கேட்டான்
கந்தல் உடுத்திய ஏழைகளோ-கண்ணீரோடு பிச்சை எடுத்தார்
ஏழ்மைக்கும், வறுமைக்கும் ஏனய்யா நீயா காரணம்?

நாஸ்திகனுக்கோ ஒரு பாதை-ஆஸ்திகனுக்கோ நாலு பாதை
ஆண்டவனே புரியவில்லை எதை நீ ஆண்டாய்? எப்போது?

வெறுமைக்குள் ஒன்றாகி உருவிழந்தாயா?
எனக்குள் மறைந்து என்னை அறிந்தாயா?
நீயே நானாகிப்போனாள் எல்லாம் நலமாகும்
அதுவே உண்மையின் வழியாகும்.

இறைவா நீ எங்கே?
எனக்கு உள்ளேயா? இல்லை வெளியேயா?
வெளியும், உள்ளும் மனதின் கற்பனையே
உண்மையில் இருப்பது சுத்த சைதன்யமே அதுவே நீ-
உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்
உன்னையே நீ அறிவாய்-தத்துவ மஸி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-05-05-23*

# நீ வருவாய் என நான் இருந்தேன் ?

---

நீ வருவாய் என நானிருந்தேன், நூற்றாண்டு
பல கடந்தும், தந்தை உம்மை அனுப்பவில்லை
பவுலும், யோவானும் கூறியவை கனவாய்க் கலைந்து
பழங்கதையாய் மாறிய துன்ப நிலை?



பல கோடி மக்கள் மாண்டிட, உலக மகா யுத்தங்கள்
நடந்து முடிந்தும், சுனாமியும், சூறாவளியும், புயல்களும்
பூகம்பங்களும், பஞ்சங்களும், கொள்ளை நோய்களும்
ஏனோ வருத்தியும் நீ வரவில்லை.



பயங்கரவாதமும், யுத்தங்களும் தொடர்ந்திட
மதப்பூசல்களும்-இனவாதங்களும் மலிந்திட
நன்மனத்தவருக்கு அமைதி ஈந்திட
ஐயா நீங்கள் வரவில்லை

அன்பினால் இன்புற்று அனுப்பிய அருமை மகனை-
அறைந்து கொன்றார் மானுடர் சிலுவையில்,
அஞ்சுகின்றாரோ தந்தை-உம்மை உலகிற்கு அனுப்பிட?
ஒன்றும் புரியவில்லை

கொல்லும் கொரோனா உலகை அச்சுறுத்த
உக்ரேன், காஸா யுத்தம் ஓயாமல் தொடர்ந்திட
உலகப் பொருளாதாரம் ஆட்டம் கண்டிட
நாளும் மடியும் பல்லாயிரம் உயிர்கள்

மெய்ஞானமும், விஞ்ஞானமும் நிலை தடுமாற
உண்மையில் உம்மைத் தேட யாருமில்லை
வந்தாலும் உங்களை கண்டு கொள்ள
யாரும் விழிப்போடில்லை

திறந்த கோயில்களில் தெய்வமில்லை-
அச்சத்தால் மூடிய ஆலயங்களிலும்
ஆர்ப்பாட்டச் சடங்குகள் ஓய்ந்த நிலை
மதமோ சாரமற்ற உப்பான நிலை

வானமும், பூமியும் மடிந்தாலும், என் வார்த்தைகள் மடிவதில்லை-
வருந்திச் சுமை சுமப்போரே-வாருங்கள் என்னிடம் ஆறுதல் உண்டு
***உயிர் தரும் உன் வார்த்தைகள்*** கேள்விக்குறியான நிலை?



அமைதியில்லா மனம் ஆழியலைபோல்
அலைமோத, நீங்கள் வரவில்லை
மடிந்து ''நான்'' உம்மிடம் வருகின்றேன்
எனக்கு வேறு வழி தெரியவில்லை

கண்காணாத வைரஸ் கொல்லுமோ
உயிரை மெல்லுமோ என்றஞ்சி-தனிமைச் சிறையில்
உன்னை நினைத்து தவமிருக்கின்றேன்

நான் என்று ஏதுமில்லை-இருப்பதெல்லாம்
இருப்பாய் ''நீ'' என்றறிய-மானுடர்க்கு
இது சோதனை காலமோ? வருத்தும் கொரோனா
வைரஸ் புதிய கல்வாரிப் பாதையோ?

உயிர் மூச்சால் ஊதி நீ ஈந்த உயிரும்
உன்னிடம் திரும்பிட-உதிரும் புன்னகையில்
நானும் ஒரு வேதாந்தி

ஊர்கள் அடங்கி நாடு முடங்க, உள்ளத்தில் அடங்காப் பீதி
புயலாய் வீசி சுனாமியாய்க் கொந்தளிக்க-இறைமகனே
இன்னும் ஏனிந்த உறக்கம்? எழுந்து கோவிட் புயலை அடக்க
இன்னும் ஏனோ தயக்கம்?

நீ வருவாய் என நான் இருந்தேன்
என்னில்தான் உன் வருகை
நான் அறியாத உண்மை?

***அன்பே சிவம்-வாழ்வே தவம்***
***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
Pax Ravichandra-12-10-2023